# இதய மலர்கள்



என். ஏ. வேலாயுதம்

ஏ. பி. நாகராஜன்.



அன்பு நிலையம்
அலைக்சந்திராரோடு
நாகர்கோவில்

1967

படையல்



கலையுலகப் புத்தொளி

முத்தமிழ்க் கலா வித்வ ரெத்தினம்

அவ்வை தி. க. சண்முகம் அவர்கட்கு

# முகவுரை

உலகம் பலவிதம். உணர்வுகளும் பலவிதம். மக்கள் தம் உணர்வுகளின் வேறுபாடு பற்றி எழுந்ததே 'உலகம் பலவிதம்' என்ற பழமொழி.

உலகம் தோன்றுமுன்பே ஒலி தோன்றியிருக்க வேண்டும். அவ்வொலியே கவிதையின் விதை எனலாம்.

கலை ஞானம், கலை ரசனை அகம் கொண்டோர்க்கு இவ் வையத்தின் ஒலியெலாம் கவிதையேயாம்! அசைவதெல்லாம் அழகே! அழகெல்லாம் கவிதையே!

உலகிடைத் தோன்றிய கவிஞரெல்லாரும் இக்கருத்துக்குட் பட்டே கவிதை புனைந்தனர் என்று கூறலாம்!

கவிதை புனைவதும் கலை. கவிதை கற்பதுவும் கலை! கலையின் பயன் இன்பம்! ஆக இன்பம் ஊட்ட வல்லது கவிதை என்று கின்றது.

கவிதையின் இலக்கணம் பற்றி, உலகக் கவிஞர்கள் கூறிய கருத்துரைகளே ஒரு கவிதைக் கோர்வையாம்!

புகழ்பெற்றக் கவிஞர்களைவிட புகழற்று மறைந்த கவிஞர் களே ஏராளமானோர்.

மாறும் தன்மை கொண்ட காலத்தின் பண்பில் மாறு நிலைபெற்ற கவிஞர்கள் பேறு பெற்றோர்களேயாவர்.

அத்தகு கவிஞர்களில் - சான்றோர்களில்சிலருடைய கவிதை பற்றிய கருத்துரைகளை கீழே காண்போம்.

# கவிதை என்றால் என்ன?

கவிதை என்றால் என்ன? என்ற கேள்வி எப்படி, யாருக்கு, ஏன் எழுந்தது என்று ஆச்சரியப்பட தோன்றுகிறது. கன்னம் குழிய சிரித்து கை கால் ஆட்டி தொட்டிலில் விளையாடும் குழந்தை மழலை பேசி தானும் குழந்தை போல கொஞ்சும் தாய்மை, எங்கும் பசுமை யையும், வானத்து நீலத்தையும், 'ஓம்'மென்றொலிக்கும் கடலலை களையும், வானத்தைத் தொடுமாறு வளர்ந்து நின்று வளங்கொழிக் கும் கனி பொழியும் மரங்களையும், மழையை அள்ளி வீசி மக்கள் வாழ பயிர் வளர்க்கும் மேகங்களையும், அருவிகள் துள்ளிப் பாய்ந்து வரும் உயர்ந்த மலைச்சாரல்களையும் கண்டு சிந்தித்து அதன் பால் தன் மனதைப் பறிகொடுப்பவர் அல்லது இம் மேன்மையான இயற்கை நிகழ்ச்சியில் ஒன்றியாவது மனதைக் கொடுக்காதவர் கள்தான் மேற்படி கேள்வியைக் கேட்பார்கள்.

மேற்படி இயற்கை நிகழ்ச்சிகளில் தன்னைப் பறிகொடுத் தவனால் கவிஞனாக ஆசைப்படாமல் இருக்கமுடியாது. பண்பாடு, கலாச்சாரம், சமயம் இவற்றைத் தனித்தனியாகப் பிரிந்து போகாமல் சேர்த்து கட்டிவைத்திருக்கும் அற்புத நாணே கவிதைகள் என்றால் மிகையாது. இன்று வரை இயல், இசை நாடகம் என்ற முத்தமிழை தன்பால் கொண்டு ரசமான ஒரு அழகுச் சேர்க்கையாக இயங்கி வரும் அற்புதம் கவிதைகளை கம்பன் முதல் பல சிறந்த கவிஞர் களின் அற்புத சிந்தனைகளை காவியங்களாக தமிழன்னை அலங்கார அணிகளாக அணிந்துகொண்டு இருக்கிறாள். அவ்வழகிய அணி களின் சிறுசிறு மதிப்பிற்கரிய பகுதிகள்தான் கவிதைகள். தமிழ் அன்னை அணிந்துகொண்டிருக்கும் காவிய மாலைகளில் ஒவ்வொரு ஒளி வீசும் சிறு மணிகளும் கவிதைகளே!

யோகம், பக்தி, நிஷ்காம்ய கர்மா என்ற அரிய சாதனை முறைகளை தன்பால்கொண்டு தேவையான சமயத்தில் எடுத்து பின்பற்றக் கொள்ளும் ஞான குருவான கீதை, குறள் போன்ற அரிய பொக்கிஷங்களிலிருந்து நமக்கு அள்ளி அள்ளித் தரும் ருசி யான இனிய கருத்துள்ள கவிதைகளை

கொள்ளை யின்பங் குலவுங் கவிதை
கூறும் பாவலர் உள்ளத்தி(லிருப்பாள்)

அப்படி இருந்து கருணை உள்ளம், விருப்பு வெறுப்பு அற்ற விரத வீரமும், தைரியம் என்ற உறுதிப்பாடுடன் நாம் முன்னேற வாழ்க்கைக்குத் தேவையான நல்லறங்களை ஆன்றோர்கள் வாக்காக நமக்கு வழங்குவது கவிதைகள்.

காலத்தை வென்றிருக்கும் காசுபொருள் கொண்டிருக்கும்
சீலத்தைக் கண்டிருக்கும் சிவமயத்தில் ஒன்றிநிற்கும்
மூலத்தைக் கொண்டிருக்கும் முனிவரர்க்குங் கருத்திருக்கும்
ஞாலத்தை நல்லிசையில் நல்வழியில் நடத்துங்கவி(தை)

என்றெல்லாம் சாகா வரத்தை ஜகத்துக்கு ஈயும் அமுதத் துளிகளே கவிதைகள்.

சிந்தனை அற்ற மனிதனே கிடையாது. சிந்திக்கத் தெரியாத மனிதனும் கிடையாது. எதைச் சிந்திக்கவேண்டுமென்று தெரியாமல் இருக்கலாம். பேசத் தெரியாத மனிதர்கள் குறைவு. எப்படி பேசுவது என்று தெரியாதவர்கள் இருக்கலாம். பாடவோ, ரசிக்கவோ தெரியாதவர்கள் ஒருசிலர் இருக்கலாம். அது அவர்கள் தவறல்ல. சிந்தனையின் கோர்வையை, இனிமையாகப் பேசும் மொழிக்கு, இசையுடன் இசைந்து, இலக்கண வரம்பு, இலக்கியச் சுவை குறைபடாமல் தன்னை அறியாது கிளம்பும் அமுதச் சொற்களே கவிதைகள் ஆகின்றன. அக்காலத்தில்

தொட்டிலாட்டப் பாட்டு — காலை
தட்டியெழுப்பப் பாட்டு
பாட்டி சொல்லும் பாட்டு — பழைய
பழமொழியும் பாட்டு
கட்டியெடுக்கப் பாட்டு — பலர்முன்
கருத்தை பேசப் பாட்டு
கொட்டி முழக்கப் பாட்டு — கூடி
கும்மியடிக்கப் பாட்டு
ஏற்றம் இறைக்கப் பாட்டு — இறைவன்
ஏற்றம் உரைக்கப் பாட்டு
காற்று வீசும் திசையில் — தோணி
கடுது போகப் பாட்டு

மாற்றம் நீக்கப் பாட்டு — மனிதன்
மாண்பு கூட்டப் பாட்டு
கூற்று நீக்கப் பாட்டு — இங்கு
கூறும் அனைத்தும் கவிதை.

என்று எல்லாவற்றையும் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் அதே கவிதை இக்காலத்தில் இயல்,இசை, நாடகம் முதலிய முத்தமிழுக்கு ஆதாரம் பழங்காலக் கவிதைகள் தானே? வசை பாடவோ, கோள் குறிக்கவோ, வீரம் வெல்லவோ அனைத்துக்கும் மனிதன் பின்பற்றும் சொற்கள் எல்லாமே பழங் கவிதைகளின் மறைமுக கருத்துக் களாகத்தான் இருக்க முடியும்.

இப்போ பல பாடல்கள் கிளம்பி இருக்கின்றன. இயல் இசை நாடகம் எனவும் பல கிளம்பி இருக்கின்றன. எல்லாம் அக்காலக் கவிதைத் தொகுப்பான நிகண்டு, தொல்காப்பியம் முதலிய இலக் கண இலக்கியங்களை மேடையாக வைத்துக் கொண்டு தான் கிளம்பி இருக்கமுடியும். சுயமாக சிந்திக்கவோ, கருதவோ முடியாத சாமான்ய எம்போன்றவர்க்கு சிந்தனையை தட்டியெழுப்பி, கருதி கவிதையாக் கத் தூண்டுவது அக்காலக் கவிதைகள்தான். மனிதனை ஊமையாக இல்லாமல் பேசவும், பாடவும் வைத்த மூல சூத்திரம் கவிதைகளே!.

கவிதைகள் இவ்வளவு மேன்மையான தத்துவங்களை கொண் டவைகளாக இருக்கின்றன. முற்காலத்தில் இயங்கி இன்றுவரை வழக்கத்தில், பழக்கத்தில் வந்துள்ள பல கவிதைகளில் இலக்க ணமோ, சொல்லுறுதியோ இல்லாதிருந்தும் நாட்டுப் பாடல்களாக ஏட்டில் இல்லாவிட்டாலும் மனதில் பதியுமாறு இருக்கின்றனவே! ஏன்? சில பாடல்களின் தொகுப்புகள் காவியங்களாகக் கூட இருக் கின்றன. ஆச்சர்யம்!

இக்காலத்தில் தமிழ்க் கவிஞர்களில் பலர் நன்குகப் படித்து பலமேற் கோள்களை இலக்கண, இலக்கிய மரபுக் குறையாமல் கவிதைகளாகப் பாடி இருக்கிறார்கள். அதை புத்தகமாக அச்சிட்டு பெரிய தலைவர்கள் மூலம் வெளியிடவைத்து பலர் போற்ற புகழுரை பெறுகின்றனர். அந்தோ பரிதாபம்! மதிப்பிற்காகப் பணத்தைப் பாராமல் விலைகொடுத்து வாங்கி சிலர் படிக்கிறார்கள். அப்புத்தகத்தில்

உள்ள கவிதைகள் அல்லது சொற்கள் அவர்கள் மனத்தைத் தொடு வதில்லை. பரிதாபமாக புத்தகத்தை அலமாரியில் வைத்து விடுகிறார்கள். ஏன் அப்படி என்றால் பாரதியின் பாட்டில் ஓரடி முன் சொன்னபடி அடிக்கடி ஞாபகத்துக்கு வருகிறது.

அது கொள்ளை யின்பங் குலவுங் கவிதை
கூறும் பாவலர் உள்ளத்திலிருப்பாள் என்பது.

கூறும் பாவலர் கொள்கையிலோ, நாவினிலோ, அறி வினிலோ இருக்கக்கூடாதா? ஏன் மொழியிலே இருக்கலாமே! உள்ளத்திலிருப்பானேன்! பாரதியார் அப்படிச் சொல்வானேன் என்றால் பதில்போல இன்னும் இரு வரிகள் ஞாபகம் வருகிறது.

அது . மனத்தினிலே நின்றிதனை எழுதுகின்றாள்
மனோன்மணி என் மாசக்தி வையத்தேவி என்பதே

ஆம். நாவில் வந்தால் பாட்டு. கண்ணால் கண்டு, காதால் கேட்டு, உணர்ச்சியின் அடிப்படையில் அறிவை முனைப்பாகக் கொண்டு கிளம்புவது பாடல்கள். உடலின் அனுபவம் பல காவிய, இலக்கியம் படித்த தெளிவு, தன்னுடைய நோக்கம் இத்தனையையும் சேர்த்து ஒரு கொள்கையை வகுத்துக்கொண்டு கிளம்புவதும் பாடல்களாகலாம். ஆனால் இவைகள் எதுவுமே கவிதைகளாகி நிலைக்கமுடியாது. கொள்கைகள் நிலையற்றது. சமயத்திற்கு தகுந் தாற்போல் மாறிவிடலாம். அறிவின் தொடர்பின்றி நாவால் மட்டும் பாடுவது பாட்டு. இது மனத்தில் சந்தோஷம் இல்லாவிட்டால் கிளம்பாது. அறிவின் உதவியுடன் கிளம்பும் பாட்டு பலசமயம் அனைவரும் ஒத்துக்கொள்ளும்படி இல்லாமலும் முரண்பட்டும் போய் விடலாம். எனவே அவைகளெல்லாம் கவிதைகளாக ஆகமுடியாது.

உள்ளம் என்பது உள் + உம் (அல்லது ஓம்) என்பதைக் குறிக்கும் என்பார் சிலர் அதுபற்றி ஆராய்ச்சி வேண்டாம் இப்போது. உள்ளம் என்பது மனிதனுடைய உணர்ச்சி, அறிவு, ஆற்றல், அனைத்திற்கும் அப்பாற்பட்ட ஒரு தத்துவம். அதில் கலப்படமே இருக்கமுடியாது. நாம் காணும் காட்சி, சொல்லும் சொல், கேட்கும் ஒலி, உடலின் உணர்ச்சி, நாசியின் நுகர்வு உள்ளத்துக்குள் செல்ல முடியாது. இவைகள் உட்புகவும் கூடாது. நாம் சொல்லிக்காட்டும் உள்ளம், மனம், புத்தி, அகங்காரம் இவைகளின் கலவையேதான்.

உள்ளம் கெட்டால் உலகமே கெடும் என்பது அருள்வாக்கு, என்றால் எந்தவிதமான கெடுதலும் உள்ளத்தைக் கெடுக்கக் கூடாது. அது கெடாமல் இருக்கவேண்டும் என்ற தத்துவம் அல்லவா! இத்தகைய கெடக்கூடாத உள்ளம் சத்திய ஞான தெய்வம் என்ற மூன்றும் ஒன்றான ஒரு உணர்வால் எப்படியோ தாக்கப்படும் போது அங்கு எதிரொலியாகக் கிளம்புவது நல்லுணர்வு என்ற நித்திய சக்தி. இது புத்தி, மனம், அகங்காரம் இம்மூன்றும் அவ் எதிரொலியை கேட்டுப் படித்து, சிந்தித்து, தெளிந்து முடிவில் நாவாம் ஒலிமயமாக்கப் படும்போது பாடல்கள், வெண்பாக்கள் விருத்தங்கள் என்று பல பெயர்கள் பெற்று அழிக்கமுடியாத நித்திய கவிதைகளாக என்றும் விளங்கும். இப்படி ஆன்றோர்களின் ஆசியாலும், மகா சக்தியின் அருளாலும் உள்ளத்தில் கிளம்பி ஒலியாகி மனம், புத்தி, அகங்காரம் ஆகியவற்றால் வளர்க்கப்பெற்று நாவால் நல்லுணர்வு நிறைந்த கவிதையாகி காவியங்கள் ஆகின்றன. இச் சத்திய கவிதைகளில் 1) பக்தி ஒழுக்கம் 2) நற்பணி இயக்கம் 3) கருணையின் மாண்பு 4) அன்பின் அற்புதம் 5) வாழ்வின் விளக்கம் 6) அறிவின் தெளிவு 7) ஆற்றலின் அடக்கம் 8) சொல்லின் இனிமை 9) தொடர்பின் வலிமை 10) தாய்மையின் பொறுமை 11) ஆண்மையின் வீரம் 12) மழலையின் மாண்பு 13) இல்லறத்தின் நல்லறம் 14) ஆனந்த அமைதியின் இன்பநிலை 15) சத்திய அஹிம்சையின் குரல் 16) (இவைகளின் ஒரு தத்துவங்கூட இல்லாத) அழிவின் அவலம், ஆகிய பல தத்துவ நாதங்களை உருவாக்கி மேற்கோள்களாக நேற்று, இன்று, நாளையென காலமுள்ளளவும் நமக்கு கவிதைகள் வழித்துணையாக இருக்கின்றன. மொழியை உடலாக மேற்சொன்ன பதினாறு தத்துவங்களை உயிர் மூச்சாகக் கொண்டு கவிதை என்ற அழகு தெய்வத் திருவுரு இவ்வுலகினிலே சிரஞ்சீவியாக உலாவி வருகின்றது. இவ்வழகு கவிதைத் திருவுருவம் பல அரும் பெரும் காவியத் தாயையும், கவிதைக் குழந்தைகளையும் பெற்றுத் தரும் அருளன்னையாக மகா சக்தியாக என்றும் நிலைத்து நிற்கும். நம் உள்ளுணர்வு, வெளிநோக்குக் கொண்டு கவிதைகளைக் காண்பது பிழையல்ல. பலரால் உணர்ந்து அன்பால் பாடப்படும் பாடலை போற்றுவது போற்றுபவனுக்கே நல்லது.

இப்படி இன்றி வாதப் பிரதிவாதங்கள் செய்வது, பட்டி மண்டபங்கள் அமைத்து காவிய கதா பாத்திரங்களை ஆராய்ந்து அந்தந்த கவிதைகளைக் கொண்டே குணவிசேஷம், தரக்குறைவுகள் பற்றி வாதமிட்டு உயர்வு தாழ்வு, நல்லவர், தாழ்ந்தவர் என்றெல்லாம் காண்பது சில சமயம் காவியங்களின் மதிப்புக்கு மாசு கற்பிப்பதற்காகக் கூட ஆகிவிடும். இக்காலப் புலவர்கள் உயர்ந்த குறிக்கோளாக அமைந்த மேற்படி காவியங்களைப் பாடிய கவிஞனையோ, புலவர்களையோ சார்ந்து பின்பற்ருவிட்டாலும், நற் கவிதைகளை ஆராய்வதாக எண்ணி அதன் மேன்மையைக் குறைப்பது மகாபாபம்.

அவரவர் அறிவு, ஆற்றல், தெளிவு, வாக்கு, வலிமை ஆகியவற்றை மட்டுமே கொண்டு கவிதைகளை அலசமுடியாது. அவரவர் உணர்ச்சி, மனவெழுச்சி, கொள்கை நோக்கு, குணப் பண்பு, பழக்க வழக்க ஒழுக்கங்களின் சார்பு ஆகியவற்றைக் கொண்டு கவிதைகளை காண்பது மனிதரிடை தவிர்க்கமுடியாத ஒரு சூழ். கண்ணுடியின் முன் நிற்பவன் தன் உருவத்தைக் கண்டு பிழையோ, மேன்மையோ கருதி அலட்சியப்படுத்துவது அவரவர் உள்ளத்தில் உள்ள உணர்வைப் பொறுத்தது.

அதுபோல இக்கால அறிவாளிகள் பழங்கால கவிஞர்களின் கவிதைகளை (பாடல்களை) கண்ணுடி என்று தெரிந்து கொள்ளாமல் தங்களுடைய குண, நோக்க, மன, அகங்கார உணர்ச்சிகளை வெளிக் கொட்டி விடுகிருர்கள். கம்பன் மற்றும் பல காவிய கர்த்தாக்கள் தங்கள் அறிவு ஆற்றல், கல்வி கொண்டு கவிதைகளைப் பாடவில்லை. அரும் சக்தி ஒலிவடிவாகி அடி எடுத்துக்கொடுக்க என்புருக, அன்பு பொங்கத் தோன்றிய தீந் தமிழ்க் கவிதை ராமாயணம் முதலிய காவியங்களாயின. அவர்கள் பாடியது இன்றுவரை என்றும் மாருமல் மாற்றமில்லாமல் சிரஞ்சீவியாக இருக்கின்றன. அதில் நாம் காணும் குறைகள் எவ்விதமான சலனத்தையும் உண்டாக்க முடியாது. அது ஒரு தனித் தன்மை.

கவிதை என்ருல் என்ன? என்ற கேள்வி எழுத்துக்கோர்வை இலக்கணச் சேர்க்கை, கொள்கை அல்ல, குறுகிய நோக்கு ஆகியவை கவிதைகளாக முடியாது. இப்படிக் கிளப்பிய பாடல்கள்

சில தாற்காலிக அனுதாபிகளால் போற்றி பாடப்பட்டு பிற அபிப்பிராய பேதத்தால் விலக்கப்பட்டு பொறுமைத் தீயால் சுட பட்டு மங்கி எங்கோ அலமாரிகளில் பழைய புத்தகங்கள் என்ற பெயரில் உறங்க ஆரம்பித்து விடுகின்றன. இந்த அல்பாயுசு கவிதைகளெல்லாம் கண்டு படித்து கைவிட்டு நல்ல கவிதைகளை நாடியவன் கேட்ட கேள்வியாக இது இருக்கலாம்.

கம்பன், சேக்கிழார் இவர்களுக்கு முன் வாழ்ந்த ஆழ்வார்கள் நாயன்மார்கள், நால்வர், வள்ளுவர்பெருமான், மணிவாசகர், ஔவை மற்றும் அருணகிரி, தாயுமானவர், அருட்பிரகாச வள்ளலார், பாரதியார் என்று எல்லா அமர கவிகளின் கவிதைகளும் என்றும் மனித வாழ்க்கைக்கு உறுதுணையாக, உறுதி வாக்காக நிலைத்து நிற்கக் காரணம் என்ன என்றும் இதோ.

அகங்காரம், சித்த அலைவு, மனவேகம், அறிவு விளக்கம், தத்துவ வெறி, ஆகியவற்றின் தன் முனைப்பின்றி மகா சக்தியால் கிளப்பப்பட்ட சத்திய நாதமே கவிதைகள். எந்த விதமான உணர்வும், புகமுடியாத உள்ளத்தினின்று இதயத்தை மூல இடமாக்கிக்கொண்டு கிளம்பி முறையே அறிவு, மனம், சித்தம், அகங்காரங்களைத் தாக்கி அலைகளின் இன்ப அன்பு நாதத்தைப் புகுத்தி ஆட்கொண்டு அறிவிலே தெளிவாகி, அன்பு ஒளியாகி, மனத்திலே குண உருவமாகி, சிந்தனையில் மறுபடியும் சொல் வடிவாகி அகங்காரத்தின் கருவியான நாவின் மூலமாக கவிதைகளாகி நம்முன் பாடிப் பரவிப் பின்பற்ற விசுவரூபமெடுத்து நிற்கின்றன.

கவிதைகள் பல சேர்ந்து காவியமாகி அக்காவிய கருத்துக்கு இசைய ஓவியங்களாயிற்று. கலையின் கை வன்மையால் திரு உருவங்கள், சிற்பம் நிறைந்த கோவில்கள் அமைந்துமாயின. கவிதைகளால் தோன்றிய கோவில்கள் மறுபடி சத்திய சிந்தனைகளோடு கூடிய பல மகாத்மாக்கள், கலைஞர்கள், கவிஞர்கள் இன்னும் தோன்றக் காரண சக்தியாக இருக்கிறது.

உள்ளுணர்வு, சத்திய நெறி, தியாக சேவை, இன்ப அன்பு ஆகிய மாபெரும் நற்குண வடிவங்களாக மனிதர்களை ஆக்கவல்ல சக்தி நல்ல கவிதைகள்தான். மனிதன் நற்பண்புகளை கவிதைகள் மூலம் கொண்டு இக்கால விஞ்ஞான வசதிகளைக் கருவியாக்கி அன்புக் கண் கொண்டு, தெய்வீக உணர்வுடன் வாழ்ந்தால்

சண்டை சச்சரவே இல்லை. வறுமை நோயே வராது. பசிப் பேய் அழிந்துவிடும். மரண காலத்தை தள்ளிப் போட்டு பல்லாண்டு நல்ல மனிதர்களாகவே வாழலாம். கவிதைகள் என்றால் என்ன என்ற கேள்விக்கு சுருக்கமான பதில்

காலத்தை வெல்ல மருந்து
ஞாலத்தில் வாழ விருந்து
சீலம் இதுஎனப் பொருந்து
சிந்திப்பாய் கவிதையை இருந்து என்பதேயாகும்.

அன்பு நிலையந் தலைவன் ஆக்கித் தரும் நற்கவிதை
இன்ப நிலையம் உலகம் ஆக்கும் எங்கும் அமைதி

**- பித்துக்குளி முருகதாஸ்**

"இழும் என் மொழியால் விழுமியது நுவலல் கவிதை"

**தொல்காப்பியனார்**

கவிதை என்பது — "செவிநுகர் கனிகள்"

**-கவிச்சக்கரவர்த்தி கம்பன்**

"சொல்லில் நாம் இல்லாதபோது பாடப்படுகின்றன"

**-திரு. பிமார்ஷியாஸ்**

"சுவை புதிது பொருள் புதிது
வளம் புதிது, சொற் புதிது, சோதிமிக்க
நவ கவிதை எந்நாளும்
அழியாத மாகவிதை"

**-அமரகவி திரு. சுப்பிரமணிய பாரதியார்**

தமிழ் பழைய மொழி. உலகின் முன்மொழி. ஆனால் நாம் தொல்காப்பியத்தையே பேசிக்கொண்டிராமல் நக்கீர நடையில் பிடிவாதம் செய்யாமல் இக் காலத்திற்கேற்றபடி உடைகளை மாற்றுவதுபோல் நடைகளையும் மாற்றிக்கொள்ள வேண்டும்.

பருவகாலப் பவனியழகும் வேனில் வண்டின் தேனிசை யமுதும் மேகம் இடித்துமின்னும் கூத்தும் வெள்ளிமாமழையின் உள்ளச்சுருதியும், அருவியின் ஓலம் ஜிம்மும், கடலின் ஓலமு கவிதை! கவிதை! வானவெளியின் மோனவட்டத்தில் அணு கலப்பாகும் அண்டபிண்டங்கள் மோதிச்சுழலும் போது காலக் கூத்திற் பூத்தது தீத்திரள் கவிதை!

கும்மிருள் வானிற் கோடி நாண் மலர்கள் ஊர்வலம் சென்றே, உதயச் சோதியிற் கலக்கும் கவிஞெளி கவிதை!

வெள்ளத்துள்ளே மின்சாரம் போல் உள்ளத்துள்ளே உணர் வுற்றதுவும், உணர்வுதுடிக்கும் மனவெறியுடனே கூடிக் குதிக்கும் கோலமே கவிதை!

தீங்கனிக்குள்ளே தித்திப்பைப் போல் இதயத்துள்ளே இனிக்கும் ஒன்றைக் கலந்துணர் களிப்பே மலர்ந்தமிழ்தாக சுவைக்கும் அதுவே அவைக்குயர் கவிதை!

கட்டிமாம்பழக் கற்கண்டுச் சொல்லும் கலைரசத்திற் கனிந்த பொருளும் சொட்டுந்தேனெனவே சுவை-

தோய்ந்த தூய நற்கவி தாயமுதாமே!
மூழ்கிமூழ்கித் தன் மோனக் கடலில்
முத்துமுத்தென சொல்லை முகந்தே

வாழுமென்றும் வளர்தமிழ் போலே!

**-கவியோகி சுத்தானந்த பாரதியார்**

"கவிதை என்பது கலை; சொல்லால் அமையும் ஓவியம்; செவிக்கு இனிக்கும் விருந்து; உள்ளம் பறக்க உதவும் சிறகு; வாழ்வை பண்படுத்தி உயர்த்தும் செல்வம்."

**-டாக்டர் திரு. மு. வரதராசனர்**

"கவிதை கடவுள்; எப்படி கடவுளைக் காட்டமுடியாதோ அப்ப டித்தான் கவிதையைக் காட்டமுடியாது. ஆனால் கடவுளைப் பற்றிப் பேசுவதைப் போல கவிதையைப் பற்றியும் பேசலாம். என்னதான் சொன்னாலும் அனுபவிப்பதுதான் கவிதை இன்பம். அருமையை எளிமையாக்கி முதிர முதிர இளமை நலத்தைப் பெருக்கிக்கொண்டி ருக்கும் உண்மையே கவிதை."

**-திரு. ச. கணேசன்**

"கவிதையின் இயல்பை வரையறை செய்வதற்கு சில நூற்றுண்டுகளாக நூற்றுக்கணக்கான இலக்கிய ஆராய்ச்சியாளர்கள் முயன்று வந்திருக்கிறார்கள். ஆனால், ஒருவரது முயற்சியேனும் இதுவரையில் முற்றும் திருப்திகரமாய் முடிந்துள்ளது என்று சொல்வதற்கில்லை. சிவபெருமான் தன்மையைத்தான் கவிதையும் கொண்டிருக்கிறது. அவரது அடியையும் முடியையும் மாலும் அயனுங்காணமுடியவில்லையல்லவா? அதுபோலவே கவிதையின் இயல்பையும் ஆராய்ச்சியாளர் கண்டுபிடிக்க முடியவில்லை.

ஆனால் இம்முயற்சிகளெல்லாம் பயன் அற்றனவா? இல்லை; இல்லவேயில்லை.

கவிதையின் இயல்புகள் மிகப் பல. அவைகளும் காலந்தோறும் இடந்தோறும் சூழ்நிலைக்குத் தக்கபடி வேறுபடுகின்றன. அவற்றுள் ஒருசில அம்சங்களையே ஒவ்வோர் ஆராய்ச்சியாளரும் அறிய முயல்வது. எனினும், தாம் கூறுவதே எல்லா வகையாலும் முற்றமுடிந்த உண்மையெனத் தாமும் நம்பி வாசகர்களையும் மயங்கச் செய்துவிடுகிறார்கள்."

"உண்மையுள்ளத்தின் அடி நிலத்திலிருந்துதான் உண்மைக் கவிதைகள் தோன்றும்."

-ராவ்சாகிப் திரு. S. வையாபுரிப்பிள்ளை

"உள்ளத்துள்ளது கவிதை — இன்பம்
உருவெடுப்பது கவிதை
தெள்ளத் தெளிந்த தமிழில் — உண்மை
தெரிந்துரைப்பது கவிதை.

தமிழ் விமர்சகர்கள் தமது தர்மத்தை நப் பல சமயங்களில் தவறவிடுகிறார்கள். தமிழில் உரைநடை நூல்களும் கதைகள் கட்டுரைகள் கவிதைகள் போன்ற புதிய இலக்கியங்களும இப்போது தான் தலையெடுத்து வருகின்றன. இந்நூற்களை விமர்சிக்கும் விமர்சகர்கள் எழுத்தாளர்களைத் திருத்தும் முறையில் விமர்சனம் செய்ய வேண்டும், தவறு செய்யும் குழந்தைகளைப் பெற்றோர் திருத்தும் முறையில்! தவறு செய்யும் குழந்தைகளைக் கொல்லும் பெற்றோர்

எங்கேனும் இருப்பதுண்டா? தமிழ் விமர்சகர்கள் எழுத்தாளர்களை ஒரேயடியாகத் தாக்கினால் தமிழுக்கு ஏற்படும் இலாபத்தைவிட நஷ்டமே அதிகப்படும். இதனால் விமர்சகர்கள் தமது கடமைகளி லிருந்தும் தவறுகின்றார்கள் என்றே சொல்லவேண்டும்.

கவிஞன் பழமரத்தைப் போன்றவன். அந்தந்தக் காலங்களில் மரம் பழத்தைக் கொடுக்கிறது. கவிஞனும் உணர்ச்சி தன்னைத் தாக்கிய காலங்களிலே தான் கவிதை பாடுவான். மரம் தனது பழங்களை யார் புசித்தாலும், புசியாவிட்டாலும் அதைபபற்றிக் கவலை கொள்ளுவதில்லை. கவிஞனும் யாருக்காகவேனும் கவிதை பாடு வதில்லை. அவன் தனது கடமையைச் செய்துகொண்டே இருப்பான்.

ஒரு கவிஞன் கவிதைகளில் எல்லாம் சிறந்த கவிதையாக இருக்க இயலாது. நெல்லில் சாவி இருப்பபது போல் மட்டமான கவிதைகளும் இருக்கலாம். புனுகுப்பிள்ளை புனுகைக் கொடுக்கிறது; அதுவே மலத்தையும் கொடுக்கிறது. நாம் புனுகைக் கொள்வது போல் சிறந்த கவிதைகளை எடுத்துக் கொள்ள வேண்டும்.

கவிதைகளில் மனிதப் பண்புகள் இடம்பெற வேண்டும். இதுவே நிலையானது. அன்பு கருணை, பொறுமை போன்ற பண்புகள் என்றும் அழியாதவை. இவைகள் கவிதைகளில் உருவாகி வெளி வந்தால் அவை சிரஞ்சீவிக் கவிதைகளாக இருக்கும்.

ஆராய்ச்சித்துறை ஜார் ஆதிக்கத்துக்கோ; சுல்த்தான் ஆட்சிக்கோ உட்பட்ட ஏகாதிபத்தியம் அல்ல; எளிய நித்திய தொழிலாளியும் தனது கருத்தைக் கூற உரிமையும், கடமையும் வழங்கும் ஒரு குடியாட்சி போலாகும்.

**-கவிமணி திரு. தேசியவிநாயகம் பிள்ளை**

"சரித்திரத்திலேறிய கவிஞன் தெய்வம்; அடுத்த அறையில் உள்ள கவிஞன் பைத்தியம்"

**-திரு. மாக்ஸ்ஈஸ்ட்மான்**

"புலவன் என்பவன் மலர்கள் சூழ்ந்த பூஞ்சோலையின் நடுவே, வானத்தை அளாவும் ஒரு மாட உச்சியில் தன்னந்தனியே பாடிக்கொண்டு மகிழ்பவனல்லன். மக்கள் நிறைந்த கூட்டத்

திலும், பெருஞ் சாலைகளிலும், போர்க்களங்களிலும் நின்று மக்களுக்குண்டாகும் இன்பதுன்பங்களில் தானும் உழன்று, அவர்களுக்குச் சோர்வு உண்டாகும்போது, அவர்களுக்கு உண்மையைக் காட்டி, அவர்களுடைய மயக்கத்தை நீக்குபவனே புலவன். அவனுடைய பாட்டெல்லாம் ஓய்ந்துபோன மக்களை எழுப்புவனவாக இருக்கவேண்டும். நம்பிக்கையற்றவர்களுக்கு நம்பிக்கை தரத் தக்கனவாயிருக்க வேண்டும். ஊக்கமிழந்தவர்களுக்கு ஊக்கமூட்ட வேண்டும். சோம்பேறிகளை எழுப்பவேண்டும். தீயவழிகளில் செல்பவர்களுக்கு நல்வழிகாட்ட வேண்டும். மக்களுக்குத் துணிவு, மகிழ்ச்சி ஆற்றல் ஆகியவற்றைப் புகட்டுவதே அவன் தொழில்''

**-கவியரசி திருமதி சரோஜினி தேவி**

''அழகுதான் கலை அழகு நுகர்ச்சியே கலையின் பயன்''

**-ஆஸ்கார் ஒயில்டு**

''நாம் செய்யவேண்டியதைக் காட்டுபவர் தீர்க்கதரிசி. நாம் யோசிக்க வேண்டியதைக் காட்டுபவர் கவிஞர்.

அனைவரிடத்திலும் கவிதையம்சம் உண்டு. முற்றிலும் கவிதையம்சமாக உள்ளவர் யாருமிலர். கவிதையைச் சரியாக வாசிக்கக் கூடியவர் அனைவரும் கவிஞரே.''

**-திரு. கார்லைல் தோமஸ்**

''......... கவிக்கோ, பாடகனுக்கோ வாழ்க்கையில் தனியிடம் உண்டு என்பதில் சந்தேகமில்லை; சொர்க்கத்தைத் தீண்டும் லட்சியவாதமென்னும் சிகரத்திலே கவியின் பெருமை ஒளிவீசுகின்றது.''

**-திரு. ஸமாசார்**

''கவிஞன் வார்த்தைகளைக் கொண்டு எழுதுகிறான் அந்த வார்த்தைகள் தனியே கிடந்தால், இடம் மாறியிருந்தால், நாம் அவற்றைத் தீண்டுவதில்லை. இன்னும் அவை இலக்கணக் கட்டுப்பாடுகளுக்குள்ளே அமிழ்ந்துவிட்டால் நமக்கு ஒரே தலைவலியும் மயக்கமும் வந்துவிடுகின்றன. ஆனால் கவிஞனின் உணர்ச்சிக் கவிதையில் இந்த வார்த்தைகள் அந்த அந்த ஸ்தா

னங்களில் நிலை தவருது விழுந்துவிட்டால் அவை நம்மை ஆனந்தப் பரவச உலகத்திற்கு ரசனை ரதத்தில் ஏற்றிக்கொண்டு போய்விடு கிறது. அவ்வரிகளையோ வார்த்தைகளையோ பாடிப்பாடி பல்லாயிர முறை அனுபவிக்கிருேம். அத்தனை இன்பத்தை அவை நமக்கு அளிக்கின்றன.

**-திரு. பி. சோமையாஜுலு**

"பாடல்களைப் படிப்பதால் பிறர் எண்ணங்களை மட்டும் அறிகிருேம் பாடல் எழுதுவதனுல் நாமே எண்ணத் தொடங்கு கிருேம்.

**-திரு. செஸ்டர் பீல்டு, லார்டு**

படிப்பவர்களின் இதயத்தைத் தொடும் இலக்கியப் படைப் பிற்குக் கவிதை என்று பெயர்.

**-திரு. ப. நீலகண்டன்**

"சங்கத் தமிழாலும், பழைய முறைகளை விடாப் பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்கும் புலவர்கள், பண்டிதர்கள் இவர்களாலும் தமிழ்மொழி வளர்ச்சி பெருது. பழைய பாட்டைப் பாடிப் பய னில்லை. புதுமுறைகளையும் பின்பற்ற வேண்டும். கிணற்றுத் தவளைகளாகக் கத்தி பிரலாபித்தால் கேட்பார் இல்லை. உலகப் போக்கையும், தேசப் போக்கையும் அறிந்து உயர்ந்த கருத்துக்களைக் கொள்ளவும், தாழ்ந்த எண்ணங்களைத் தள்ளவும், உணர்ச்சியும் ஊக்கமும் பொதுமக்களிடை உண்டாக்கும் கவிதைகள் இயற்றினுல் தான் அவை இளைஞர்களைக் காந்தம்போல் வசீகரிக்கும்."

**-ராவ்பகதூர் டாக்டர் டி. எஸ். திருமூர்த்தி**

"யாப்பின் அடிமையாகக் கவிஞன் பாடுவது சரியல்ல; யாப்பின் அதிகாரியாகவே இதய பாவத்தை ஒட்டி கவிஞன் அருளா வேசத்துடன் பாடவேண்டும். ஒருவருடைய கட்டாயத்துக்காகக் கவிஞன் - உண்மைக் கவிஞன் எந்த நேரமும் பாடமாட்டான். இயற்கைவனப்பால் தூண்டப்பட்டு அருளால் அழைக்கப்பட்டே உண்மைக் கவிஞன் உணர்ச்சியின் ஆழத்தில் கர்ஜிக்கிருன்."

**-திரு. வி. ஆர். எம். செட்டியார் பி. ஏ.**

"நாம் எதைச் சொல்லமுடியாமல் கனவு கண்டு சொல்லத் துடிக்கிறோமோ, அதை நமக்காகச் சொல்லுகிறவன் கவிஞன். நம்முடைய, அதாவது சமூகத்தின் தொண்டன் கவி. அவன் வார்த்தைகள் சாகா வரம் பெற்ற ஒளிச் சுடர்கள்."

-திரு. கல்கி

"இலக்கிய வளர்ச்சிக்கு வாசகர்கள் மட்டும் தடையல்ல. அதிக விநியோகமுள்ள வாரப் பத்திரிகைகள், மாதப் பத்திரிகை களில் வேலை பார்க்கும் துணையாசிரியர்கள் தான் முதல் ரக முட்டுக் கட்டைகள்!

இப்படி உற்சாகம் அளிக்காத சூழ்நிலையில் இருக்கிற உற் சாகத்திற்கும் ஊக்கத்திற்கும் குடம் உடைத்துக் கொள்ளி வைக்கத் தயாராக உள்ளவர்கள் நிறைந்திருக்கிற காலத்தில் - ஒருவன் விடாப் பிடியாக எழுதிக் கொண்டிருக்கிறன் என்றல், அதிலும் தனக்குச் சரியென்று தோன்றியதைத் தயங்காமல் எழுத்துமூலம் ஒலி பரப்புகிறன் என்றல், அந்த எழுத்தாளன் எனது வாழ்த்து தலுக்கும் நிச்சயமாகப் போற்றுதலுக்கும் உரியவன் ஆவான்."

-திரு. வல்லிக்கண்ணன்

"மலட்டு இலக்கியங்களாலும், மலட்டு இலக்கியாசிரியர் களாலும் தேசம் பெருமையடையாததாகிவிடுவதோடு சிறுமை யடைவதாகவும் மாறிவிடுகிறது. இந்த நிலை, தரங் கெடுவதில் போட்டி போடும் பத்திரிகைகளாலும் நியாயமற்ற அதிக வியாபார மனப்பான்மையாலும்தான் இங்கு வந்துவிட்டது என்று சொல்ல வேண்டும். இதை மீறி இந்தப் பனி மூட்டத்தைக் கடந்து பாடு படவேண்டிய கடமையும் சமுதாயப் பொறுப்பும், காலத்தை வெல்லும் உயிர்த் துடிப்புள்ள கதாபாத்திரங்களைப் படைக்கவேண் டிய திறனும் தமிழக இந்திய எழுத்தாளர்களுக்கு வரவேண்டு மென்று ஆழ்ந்து சிந்திக்கும்போது அதுவே ஒரு தாகமாக இருக் கிறது நமக்கு."

-திரு. நா. பார்த்தசாரதி

"வாழ்க்கையில் உள்ளதை உள்ளபடி சித்தரிப்பதுதான் இலக்கிய முறை. ஆனலும் வாழ்க்கையில் மேன்மையும் உண்டு, சிறுமையும் உண்டு; அழகும் உண்டு, அவலட்சணமும் உண்டு; பயன்படுவதும் உண்டு, பயனற்றதும் உண்டு. பொறுக்கி எடுத்துக்

கொள்வதில்தான் எழுத்தாளர்களின் கலைத் திறமை நிற்கிறது. கலையில் உண்மையிருக்கவேண்டும். உண்மையின்றிக் கலையில்லை. ஆனால் உண்மையெல்லாம் கலையாகிவிடாது. நிகழ்ச்சிகளையும் சம்பாஷணைகளையும் பதிவு செய்துவிட்டால் இலக்கியமாகிவிடாது. எது கலைக்கு உதவும் என்பதைக் கண்டு அதைத் தனிப்படுத்தி இலக்கிய உருவத்தைத் தந்தால் அது கலையாகும்.''

-திரு. C. இராஜகோபாலாச்சாரியார்

''மக்கள் சமூகத்தில் காணப்படுகிற தீமைகளையும் கொடுமைகளையும் அநாகரீகங்களையும் தவறுகளையும் சுட்டிக் காட்டி சமூக வாழ்க்கையைத் தூய்மைப்படுத்தவேண்டியது எழுத்தாளன் கடமையாகும். அரசியல் அதிகாரங்களில் காணப்படுகிற குற்றங் குறைகளையும் எடுத்துக் காட்டி சீர்திருத்தவேண்டியதும் எழுத்தாளன் கடமையாகும். அரசியல் சமூக இயல்புகளில் காணப்படுகிற குறைபாடுகளைச் சுட்டிக் காட்டி நல்ல வளர்ச்சிக்கு வழி காட்டுகிறவனே சிறந்த எழுத்தாளன் ஆவான். மக்கள் சமூகத்திலும் அரசியல் அதிகாரத்திலும் காணப்படுகிற பழக்க வழக்கங்களையும் செய்முறைகளையும் எடுத்துக் கூறி அவற்றைப் போக்க வழி தேடாமல் அவற்றைப் பொது ஜனங்களுக்கு எடுத்துக்காட்டாமல், எழுத்தாளன் காதற் கதைகளை மட்டும் எழுதிக்கொண்டு காலந் தள்ளுவானாகில், அவனுடைய எழுதுகோல் எந்த விதத்தில் போர்வாளை விட வலிமை வாய்ந்ததாக இருக்கமுடியும்? அது பேடி கை வாள் போலப் பயனற்றதாகவன்றோ இருக்கும்!

மனிதர் உடலிலே தோன்றுகிற நோயை மருத்துவர் தீர்க்க வேண்டும். மனித சமூகத்திலே காணப்படும் தீமை நோய்களை எழுத்தாளன் தீர்க்க வேண்டும்''.

-மயிலை திரு. சீனி. வேங்கடசாமி

''உணர்ச்சி கலந்த எண்ணங்களை வெளியிட நாடகம், கதை, கவிதை போன்றவை ஏற்றவையாகும்.''

-டாக்டர் திரு. வ. ஆ. தேவசேனபதி

''பாட்டு என்றால் அது இசைச் சுவையுடன் விளங்கவேண்டும். தெள்ளிய எளிய சொற்களுடன் விளங்கவேண்டும். கற்பனை நயத்துடன் விளங்கவேண்டும். கனிந்த மன உணர்ச்சியை எதிரொலிப்பதாக விளங்கவேண்டும். இத்தனை கூறுகளையும் கொண்டு

மனித வர்க்கத்தின் உயர்வு எண்ணி ஒரு பாட்டு உருவாகுமானால் அது நமது உள்ளத்தை என்றென்றும் கவரக்கூடிய ஒரு அற்புதக் கவிதைப் படையலாகிவிடும்.

... பக்திப் பாடலா, வேதாந்தப் பாடலா, அல்லது தேசீயப் பாடலா, விடுதலைப் பாடலா என்பதில் மட்டும் ஒரு பாட்டு நீடித்து நிற்கமுடியாது.''

-திரு. ப. ஜீவானந்தம்

''படிப்பவர் உள்ளத்தைத் தொட்டு இலக்கிய இன்பத்தை உண்டாக்க வல்ல கருத்துக்களை இலக்கண அமைதி பொருந்திய செய்யுள் வடிவத்தில் கொண்டுள்ளதே கவிதை எனப்படும்.''

-டாக்டர் திரு. இராசமாணிக்கனார்

''இரத பந்தனமும், கமல பந்தனமும் செய்யும் சித்திரக் கவிகளை அஜீர்ணவாதி ஆனந்தமாய் உட்கார்ந்து அனுபவிக்கலாம்; மக்களுக்குப் பயனில்லை. உலகுயிர் உய்ய வழிகாட்டுவோனே கவிஞன்! உயிரில்லாத உடலை அழகு செய்யும் கவிஞர்கள் இன்று நமக்குத் தேவையில்லை; அழகில்லாத உடலுக்கு உயிரூட்டும் கவிஞர்கள்தான் வேண்டும். சொற்களில் ஜால சித்திரங்கள் செய்பவனல்ல கவிஞன்; வாழ்வின் புரையைப் போக்க வழி கோலுபவனே கவிஞன்.''

-ஔவை திரு. தி. க. ஷண்முகம்

''மனத்தில் தோன்றும் இனிய உணர்ச்சிகளைச் சொல்லிலே மொழிபெயர்ப்பதுதானே கவிதை எனப்படுவது?''

-திரு. பெ. நா. அப்புசாமி

''கவிதை என்றால் செங்கல் அடுக்கி வீடு கட்டுவதுபோல் சொல் அடுக்கிக் கட்டுவது கவிதையாகாது. உள்ளத்தின் உண்மையொளி அழகோடும், சுவையோடும், சூட்டோடும் பொங்கித் தானே கவிதையாக ஊற்றெடுக்க வேண்டும். படிப்போரை அது ஆட்டிப் படைக்கவேண்டும்.''

-திரு. அகிலன்

''பூக்களைக் கட்டினால் சரம்; சொற்களைக் கட்டினால் கவிதை. உதிரிப் பூக்கள் தலையில் தங்கா; உதிரிச் சொற்கள் நினைவில் தங்கா.

நாரிற் கட்டிய பூக்களில் ஒன்றைத் தொட்டால் பல பூக்கள் அதைப் பின்பற்றி வரும். கவிதையில் கட்டப்பெற்ற சொற்களில் ஒன்றைத் தொட்டால் பல சொற்கள் அதைப் பின்பற்றி வரும்.

கற்றதை நினைவில் வைப்பதற்கே கவிதைகள் தோன்றின. எதுகையும் மோனையும் அதற்குப் பெருந்துணை செய்வன.

உரை நடையில் ஓலையில் எழுதினால் வேலைச் சுமை மட்டு மல்ல, ஓலைச் சுமையும் பெருகிவிடும். ஆதலின் உயர்ந்த கருத்துக்களை குறைந்த சொற்களால் சிறந்த பாக்களாக அமைப்பவன் கவிஞன்; அமைந்தது கவிதை; அதை விரித்துரைப்பது விரிவுரை; உரைப்பவன் விரிவுரையாளன். கதை பேதைக்கும் - கவிதை மேதைக்கும் ஏற்றவை."

-முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம்

"உயிர் வாழ்வுக்கு வேண்டிய நல்லொழுக்கத்திற்கு மாறுகப் போதிக்கும் எந்தக் கவிதையும் வாழ்வுக்கு எதிராகவே செய்யப் பட்ட கலகமாகும்."

-திரு. ஆர்னல்ட்

"கவிதையின் அடிப்படை வாழ்க்கையைப் பற்றிய திற னாய்வே.

பண்பாடு, சமயம், ஆழ்ந்தக் கருத்துக்களைத் தருதல் வேகமான உணர்ச்சிகளையும் புலனையும் அடங்கச் செய்தல், வாழ்வின் நன்மைகளை மிகுதிப்படுத்தல் என்ற இவையெல்லாம் கவிதையின் பயன்களாம். இவையில்லாவிடில் கவிதை என்பது பயனற்ற ஒலிக்கூட்டமாகவே நின்று விடும்."

-திரு. ஐ. ஏ. ரிச்சர்ட்ஸ்

"நினைவும் சொல்லும் உணர்ச்சியைப் போர்த்து வெளிப் படும்பொழுதே கவிதை வெளிப்படும்."

-திரு. ஜான் ஸ்டுவர்ட் மில்

"இசையுடன் நிலைப்பதே கவிதை."

-திரு. கார்லைல்

"சாதாரண அறிவுக்கு மேற்பட்ட உணர்ச்சி நிலையும், சாதாரண அளவுக்கு மேற்பட்ட ஒழுங்கும் கலந்து விளையாடுவது கவிதை."

-திரு. கோல்ரிட்ஜ்

"கவிதையின் அழகு கவிதையில் உள்ளதே தவிர கவிதை கூறும் பொருளிலன்று."

—திரு. **கில்பர்ட் மர்ரே**

"கற்பனையின் வெளிப்பாடே கவிதை.

இனிமை மிகுந்த பாடல்கள் அளவுகடந்த துக்கத்தை எடுத்துரைப்பதில் அமைந்துள்ளன.

நம்பவியலாத நடந்தவற்றைப்பற்றிக் கவிதை புனைவதைக் காட்டிலும் உலகியலில் நம்பக்கூடியவற்றைப் பற்றிக் கவிதை புனைவது சிறந்தது.

கவிதையின் படைப்புக்கள் மெய்ம்மையானவை அல்ல. ஆனால் உயர்ந்த உண்மைத் தத்துவம் அமைந்தவை. எப்படி இருக்க வேண்டுமோ அவைகளேயன்றி எப்படி உள்ளனவோ அவையல்ல.

கவிதைவன்மை என்பது சாமானியப் பொருட்களைக் கொண்டு அசாதாரணமான தொடர்புகளை உண்டாக்கும் திறமை."

—திரு. **ஷெல்லி**

"போப்புடைன் போன்றோர் தம் அறிவின் உதவியால் கவிதை புனைந்தனர். சிறந்த கவிஞர் ஆன்ம நேய ஒருமைப் பாட்டால் கவிதை ஆக்கினர்.

கவிதை உண்மை என்று கூறும்[illegible] நாம் மெய்ம்மை என்று கூறுவனவற்றுடன் அது ஒத்திருக்கவே[illegible] என்பது [illegible]த் தன்று. மெய்ம்மையை விஞ்ஞானத்துக் [illegible]றும். [illegible] பெறும் மெய்ம்மைகளை உள்ளத்து உணர்வு [illegible] வாறு [illegible]றிகி ன்றேமோ, அவை எத்தகைய மனநிலை [illegible] உண்டாக்கு கின்றனவோ — மகிழ்ச்சி, வருத்தம், நம்பிக்கை, அச்சம், வெறுப்பு, மரியாதை என்பவற்றுள் எவ்வாறெவை [illegible] உண்டாக்குகின்ற னவோ, அவற்றைக் கூறுவதே கவிதை உண்மை எனப்படும். கவிதையில் உண்மை ஆராய்ச்சி வேறு விதமாகும். பொருள்கள் எவ்வாறு உள்ளது என்று கூறுவது உண்மையன்று, நமக்கு எவ் வாறு அது படுகிறது, எவ்வித அழகை வழங்குகிறதென்பதே சிறந்த சோதனையாகும்."

**ஹட்சன்**

"அக மனத்தில் தோன்றிக் காலம், இடம், பொருள் என்னும் கட்டுப்பாடுகளை ஒருவாறு வென்று நிலை பெற்றிருக்கும் கவிதையைப் பற்றிய முடிவான கருத்தை யார் அறிவிக்கமுடியும்? மனித மனத்தின் ஆழமும், பரப்பும், அறியமுடியா இயல்பும் கவிதைக் கலையில் மிளிர்வதைக் காணலாம்.

கவிஞனுடைய முடிபுகள் பொறி புலன்கள் மூலம் அனுபவித் தற்குரியனவேயன்றி, ஆராய்ச்சி அறிவு என்று சொல்லப்படும் சோதனைச் சாலையில் சோதனைக் குழாய்களில் போட்டு அலசிப் பார்ப்பதற்காக ஏற்பட்டவையல்ல! அவனுடைய வேலை இதுவே உண்மை என்று தருக்க மூலம் நிருபிப்பதன்று. ஆனால் தான் அனுபவித்த பொருளை நாமும் கண்டோ, கேட்டோ அனுபவிக்கு மாறு செய்தலேயாம்.

கவிதையைப் படித்த உடன் தமது அனுபவமாகிய குப்பியில் அளந்து, கவியும் வாழ்க்கையும் மாறுபடுகின்றன என்று கூறுகிறவர் களும் உண்டு. இத்தகையோருக்காகக் கவிதை தோன்றவில்லை என்பதை மனதில் நன்கு பதித்துக் கொள்ளல் வேண்டும்.

கவிதையும் ஒரு கலை. கலைகளின் வேலை என்ன? தன்னைப் படைத்தவன் என்ன உணர்ச்சியை வெளியிட நினைத்தானோ அவ்வுணர்ச்சியைப் பிறருக்கு வழங்குவதே அவற்றின் தொழில்.

நமது விருப்பு, வெறுப்புக்கும் கவிதைக்கும் தொடர்பு இருத் தல் கூடாது. அவ்வாறு ஏற்றுவதானால் எந்த ஒரு கவிதையையும் யாரும் சிறந்தது என்று கூறமுடியாது போய்விடும்.

கவிதைக்குரிய பொருளில் நாம் காட்டும் விருப்பு, வெறுப்பை வைத்துக் கவிதையை மதிப்பிடுதல் ஆகாது.

வாழ்க்கையிலும் மனிதப் பண்பிலும் உள்ள பொதுத் தன் மையை எடுத்துக் கூறுவதே கவிதையின் நோக்கமாகும்.

மனிதனிடத்துக் காணப்பெறும் அறிவு, உணர்ச்சி என்ற இரண்டனுள்ளும் உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டே கவிதை பிறக்கிறது.

கவிதையைப் படிப்பதற்குரிய செம்மையான முறை'உரக்கப் படித்தலேயாகும். அங்ஙனம் படித்தால்தான் கலைஞனது முழு உணர்ச்சியையும் நாம் பெறமுடியும்.

கவிதையில் பலரும் அறிந்த சொல்லையே பயிலுதல் வேண்டும். ஒவ்வொரு மனிதனும் தானாக ஆக்கிய சொல்லையே பயன்படுத்தவேண்டுமெனில் அவனியற்றிய கவிதை அவனுக்கு மட்டுமே பயன்படுவதாய் முடியும்.''

–திரு. அ. ச. ஞானசம்பந்தனர்

''இயற்கையின் உந்துதலால் ஆன்மபோதத்தோடு உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதுதான் கவிதையாகும். பொருள் கவிந்து இனிய ஓசை கவிந்து படிப்போர் உள்ளங்களைத் தன்பால் கனிந்துவிடுமாறு செய்வதுதான் கவிதையாகும். ஒரே வார்த்தையில் சொல்லவேண்டுமானால் உயர்ந்த, உணர்ச்சி மிக்க உள்ளத்தின் இசையே கவிதையாகும்.

ஆன்மா அனுபவமே அழகிய கவிதையாம். ஐம்பொறி உணர்வே கவிதை அனுபவம், மனதைக் கவர்வது கவிதை. தேசுறு ஞானந் தெளிவது கவிதை. அறத்தினும் அன்பினும் இயல்வது கவிதை. பிறப்பிலும், இறப்பிலும் பிறப்பது கவிதை. அமிழ்தாம் தமிழில் உள்ளதே கவிதை. தமிழே கவிதை.

''இமிழ்திரை உலகில் உள்ள
அழகெலாம் கவிதை
எங்கெங்கு அழகதுண்டோ
அங்கெலாம் கவிதையுண்டு
எங்கெங்கு உண்மையுண்டோ
அங்கெலாம் கவிதையுண்டு''

–திரு. நாரண துரைக்கண்ணன்

''காலச் சிறை விரித்துக்
கட்டற்ற மேனியொன்றாய்க்
கோலச் சுவை தெறிக்கும்
கொந்தளிப்பே என்கவிதை.

கீதம் இனிய குயில்
கிண்கிணியின் வார்த்தைகளாய்
போதும் கனியுமுயிர்ப்
புல்லரிப்பே என்கவிதை.

நாதக் கிறுகிறுப்பில்
நளினமணி வார்த்தைகள்தாம்
காதல் கிறுகிறுக்கும்
கண்சிமிட்டே என்கவிதை."

–சந்தக் கவிமணி **தமிழழகன்**
('என் கவிதை' என்னும் நூலில்)

"கவிஞனின் உணர்ச்சி இதயத்தில் கவிதை எழுகிறது. வாழ்வில் பலப்போது அவன் கண்ட காட்சிகள், அனுபவித்த அனுபவங்கள் இவையெல்லாம் அவன் உள்ளத்தில் ஓவியங்களாய்ப் பதிகின்றன. காலத்தின் வாய்ப்பும், அமைதியின் சூழ்நிலையும், ஆர்வத்தின் துடிப்பும் அவனைத் தீண்டும்போது சிந்தனைத் தெளிவில் அவன் கவிதை இசைக்கின்றான். அந்நேரம் அவன் யாப்பிலக் கணத்தைத் தேடுவதில்லை; அகராதியைப் புரட்டுவதில்லை. தளை நோக்கித் தயங்குவதில்லை; அணி பொருத்தம் சிந்திப்பதில்லை. ஏற்ற சொல்லும், இனிய நடையும் உலையா ஒழுக்கும், உன்னதக் கற்பனையும், அழகிய உவமையும் வருந்தாமல் திருந்தத் தாமே வந்து சேர்கின்றன. இவைகளின் இணைப்பால் கவிதை, கவிஞன் உள்ளத்தின் உண்மையாய், அனுபவ முத்திரையாய் அமைகின் றது. இக்கவிதைகளிற் சில, தெளிந்த சுனையின் தண்புனல் போலவும், மலர்மிசைத் தோய்ந்து குழைந்து தவழும் தென்றல் போலவும் சுகம் நல்குகின்றன. சில, தீயின் வெம்மையையும், திங்களின் தண்மையையும் தருகின்றன. வேறு சில, மலையின் அசையாத் தன்மையையும், மறிகடலின் விரிவையும், ஆழத்தையும் அளிக்கின்றன. இன்னும் எத்தனையோ வித விதப் பண்புகளை உமிழ்கின்றன. இவையெல்லாம் காலத்தாலும் காலத்தின் கோலத் தாலும் அழியாத் தன்மை பெற்றவை. என்றும் இளமை எழிலோடு இலங்குபவை."

–கவிஞர் **திரு. தே. ப. பெருமாள்**

"கவிதை என்பது உண்மையும் ஆகாது; ஞானமும் ஆகாது; ஆனால் உண்மைக்கு அழகைக் கொடுப்பது; ஞானத்திற்கு ஒளி யைக் கொடுப்பது.

பொதுவாகக் கவிதையில் இரண்டு இனங்கள் உண்டு. ஒன்று அலங்கார இனம், மற்றொன்று ஆத்மீக இனம். அலங்காரம் என்பது தெரிந்தவைகளை முன் இருத்திக்கொண்டு அவைகளைக்

கவிதை வடிவில் புனைந்து காட்டுதல். மற்றொன்று கவிஞனாலும் அறிய முடியாதபடி தற்செயலாக அமைதல்.

கவிதை என்று வரும்போது பொருளைப் பற்றிய சித்தாந்தத்தையே மாற்றிக்கொள்ளவேண்டும். பொருளை, நல்ல பொருள் என்றும் தீய பொருள் என்றும் பாகுபாடு செய்வதெல்லாம் உலக நடையில்தான். கவிதை வரம்பிற்குள்ளே அத்தகைய பாகுபாட்டிற்கு இடம் கிடையாது. ஏன் கிடையாதென்றால் கவிதையின் மதிப்பை அளவிடற்குரிய உரைகல் பொருளில்லையாதலினால். பொருள் என்பது கவிதைக்கு வெளியே உள்ள சரக்கு. வெளிச் சரக்கை மதிப்பிட வேண்டுமா-அல்லது அதன் மூலம் உருவான கவிதையை மதிப்பிடவேண்டுமா என்றால் கவிதையைத் தான் மதிப்பிடவேண்டும்''.

*பேராசிரியர் திரு. முத்துசிவனார்*

★ ★ ★ ★

மேலே எடுத்துக்காட்டிய பொன்மொழிகள் பல நாட்டு கவிஞர்-அறிஞர்களின் அகத்திலுதித்த மணிமொழிகள்.

பேரறிஞர்கள் டாக்டர் மு. வரதராசனார், டாக்டர் இராச மாணிக்கனார், கவி யோகி சுத்தானந்த பாரதியார், பித்துக்குளி முருகதாஸ், முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம், [illegible] நாரண துரைக்கண்ணன், அகிலன், சந்தக் கவிமணி தமிழழகன் ஆகியோர்களிடம், கவிதை பற்றிய கருத்துரைகளை கடிதம் வழி எழுதிக் கேட்டேன். என் வேண்டுகோளை மதித்து உடனேயே தங்கள் கருத்துக்களை எழுதி அனுப்பி உதவினார்கள். அவர்களுக்கு எனது இதய பூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்னிசை வள்ளல் பித்துக்குளி முருகதாஸ் ஒரு வாழ்த்துக் கட்டுரையே எழுதி அனுப்பினார்கள். கவிதை பற்றி கவினுற விளங்கியிருக்கும் அக்கட்டுரையே ஒரு இன்பச் சுரங்கமாகப் பொலிகின்றது.

கட்டுரையில், முதற்பகுதியின் முடிவில் "இயற்கை நிகழ்ச்சியில் ஒன்றியாவது மனத்தைப் பறிகொடுக்காதவர்கள் தான் கவிதை என்றால் என்னவென்று கேட்பார்கள்'' என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

அவ்வாறு நான் ஒரு கேள்வியை எழுப்பிய காரணத்தால் தானே, அறிஞர் பலருடைய கருத்துக்களை நானும் அனுபவித்து, பிறருக்கும் வழங்கும் பேறு கிட்டியது! என்ற உண்மையை தாழ்மையோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

மேற்குறிப்பிட்டுள்ள சான்றோர்களின் பொன்மொழிகளைத் தவிர மற்றைய பொன்மொழிகளெல்லாம், பல்வேறு நூல்களிலிருந்து பொறுக்கி எடுத்தவை. அவற்றில் முக்கியமாக உதவியது அறிஞர் அ. ச. ஞானசம்பந்தனுர் அவர்கள் எழுதிய ‘இலக்கியக் கலை’ என்னும் பனுவல் ஆகும்!

கவிதை பற்றிய அறிஞர்களின் கருத்துரைகளை உற்று உணருங்கால் ஒன்றுக்கொன்று மாறுபட்டவைபோற் தோன்றலாம்! என்ருலும் அம்மாறுதல்கள், ஆதவனை, சூரியன், கதிரவன், ஞாயிறு, வெய்யோன், பகலவன் என்றெல்லாம் பெயர் மாற்றி அழைப்பது போன்ற மாறுபாடேயாம் என்பது எனது எண்ணம்!

அறிஞர் தம் கருத்துரைகளுக்குள்ளே பொதுவான-வலுவான ஒரு உண்மை மலர் மாலை நடு **நார்** என விளங்குவது காணலாம்.

அதாவது, கவிதை என்பது அகத்தில் எழுவது; அழகுடன் மிளிர்வது, மனம் ஊறும் கட்டுள் உணர்வெழும் வேகத்தால் எழுகின்ற அலைகளே கவிதைகள்! இன்னவாறு இப்படி அமைவது தான் கவிதை என்று உறுதியாகக் கூற இயலாத ஒரு ஒளிப் பிழம்பே கவிதை என்ற ஒரு பொதுமையான உண்மையே **நாராக** இருக்கிறது என்று உணரலாம்!

கவிதை என்னும் சொல்லை ஆராய்ந்தால் அதனுள் ளிருக்கும் செல்வத்தைக் கண்டு இன்புறலாம்.

கவிதையில் கடைசி எழுத்தான – ‘**தை**’ – யை நீக்கி விட்டால் அசரீரியைக் குறிக்கும் **கவி** எனும் சொல் இருக்கிறது. இடையெழுத்து – ‘**வி**’ – யை எடுத்துவிடில் ‘**கதை**’ – யைக் காணலாம். கற்பனையும் கலந்தது கவிதை என்னும் உண்மை, **கதை** என்னும் சொல்லில் வெளிப்படுகிறது. முதல் எழுத்தான- ‘**க**’– வென்னும் சொல்லை நீக்கினுல் அடிப்படை செல்வத்தைக் குறிக்கும் **விதை**யைக் குறிக்கிறது. அதாவது இலக்கியங்களின் தோற்றத்திற்கு விதையாக - வித்தாக அமைவது - அமைந்தது கவிதையே என்னும் உண்மை வெளிப்படுகின்றது

ஆக, **கதை** – காட்டும் கற்பனைச் செல்வமும் **கவி** – காட்டும் அசிரீரி செல்வமும் **விதை** காட்டும் அடிப்படைச் செல்வமும் – ஆக முச்செல்வங்களும் சூல்கொண்டு மிளிரும் சொல்லாக ஒளிர்கின்றது **கவிதை** என்னும் கவின் மிகு சொல். எண்ணி – எண்ணி இன்புறத் தக்கது இவ்வுண்மை. நம் முன்னோர் களின் சான்ருண்மை, அறிவுக் கூர்மை தற்காலத் தமிழகத்தை தலை வணங்கச் செய்கின்றது. எந்தக் காலத்திலோ தோன்றிய சொல். இன்றும் எவ்வளவு இனிப்பாக இருக்கிறது! என்றும் இனிக்கும் **கவிதை!**.

காலத்தைப் போன்றே, மனிதரின் உணர்வுகளும் கணத் திற்குக் கணம் மாறும் தன்மையது. அவ்வாறு மாறுகின்ற காரணத் தால்தான் உலகம் இயங்குகின்றது. நாள் முழுவதும் ஒரே உணர்வில் இருக்க மனிதனால் இயலாது. இந்த நியதிக்கு கவிஞன் மாறுபட்ட வனாக முடியுமா?

“**இதய மலர்கள்**” என்னும் இந்நூலினுள் அடங்கிய கவிதைகள் இன்று நேற்று என்று ஒரு சில நாட்களில் எழுதியவை யல்ல! அவ்வாறு எழுதிக் குவிக்க என் போன்ற பழகும் எழுத் தாளர்களுக்கு முடியாது! சுமார் ஏழு வருடங்களாக அவ்வப்போது என் இதயத்துள் ஏற்பட்ட உணர்ச்சிகளின் உருவங்களே இப் பொழுது உங்கள் அன்புக் கரங்களில் இருக்கும் கவிதைகள்; என் இதயத் தோட்டத்தில் மலர்ந்த மலர்கள்! மாதத்திற்கு ஒன்ருகவும், ஆறு மாதங்களுக்கு ஒன்ருகவும், மலர்ந்த மலர்கள் உண்டு. ஒரே நாளில் இரண்டு மூன்று என்றவாறு மலர்ந்த மலர்களும் உண்டு. அம்மலர்களில், அறம் உண்டு; அங்கதம் உண்டு; பொருள் உண்டு; இன்பம் உண்டு.

ஒவ்வொரு மலரும் ஒவ்வொரு உணர்வு பற்றி விரிந்தது. எனவே பாடலைப் படிக்கும் அன்பர்கள் அவ்வுணர்வு கண்டு - கலந்து பாடி இன்பமுறுவார்களாக.

**புதுமைகள் பிறக்கின்றன!** அவை நாளும் முன்னேறுகின்றன. இவ்வுண்மை மனம் கொண்டு கவிதை இலக்கணம் கற்றுணர்ந்த சான்றோர்கள் - புலவர்கள், "இதய மலர்களில்" குற்றம் காணில் தமிழ் வளர்ச்சி விரும்பி என்னை இடித்துரைத்து உதவினால் அடுத்த பதிப்பில் குற்றம் திருத்தி உதவியவர் பெயரையும் நன்றியோடு வெளியிட்டு வணங்குவேன்.

மலர் மணம் நுகர்க!

நாகர்கோவில்,<br>15-8-1967.

அன்பன்

**என். ஏ. வேலாயுதம்**

*தீனபந்து ஆஸ்ரமத்தலைவர், இன்னிசை வள்ளல்*
*அருள்பெற்ற பெருமுனி பித்துக்குளி* **முருகதாஸ்** *அவர்களின்*

## *வாழ்த்துரை*

கருணையும், கடும் உழைப்பும், நாட்டு வளமும், நல்லோர் உறவும் பெருக தங்கள் கவிதைகளும், நூல்களும் பயன்பட தமிழ் அன்னை அருள்வாள்!



# இதய மலர்கள்

***

## இறை வணக்கம்

எங்கும் நிறைந்த இறையே
என்னுள் கலந்த நிறையே
மங்கா எழிலே ஒளியே
மனதைக் கவரும் நிதியே
திங்கள் ஞாயிறு எனவே
தினமும் சுழலும் சுழலே
தங்கிடு எந்தன் அகத்தில்
தமிழினைத் தருவாய் அருளே!

## கணபதி வணக்கம்

ஓங்காரப் பொருளே வருக
ஓர்கையா உவந்தே வருக
பாம்பணிந்தோன் மகனே வருக
பாமாலை சிறக்கவே வருக!

## சிவபெருமான் வணக்கம்

ஐந்தெழுத்து ஒளியே வருக
ஆனைமுகன் அப்பா வருக
பைந்தமிழின் முதலே வருக
பாலனுக்கு அருளே தருக!

★ ★ ★

பார்த்தால் விழி இனிக்கும்
பாடினால் நா இனிக்கும்
ஈர்த்தால் உளம் இனிக்கும்
இணைந்தால் உடல் இனிக்கும்
வார்த்தால் கரம் இனிக்கும்
வணங்கினால் சிரம் இனிக்கும்
கீர்த்தியை சொலப் போமோ
கிரிஉறை சிவக் கொழுந்தே!

## முருகன் வணக்கம்

இச்சா கிரியா ஞான என்ற
இணையிலா மூ சக்தியையும்
மெச்ச மணந்த முருகா வருக
மேவும் தமிழை தரவே வருக!

★ ★ ★

முருகென்பார் முதலென்பார்
முத்தமிழின் தெய்வமென்பார்
கரு நீயே கதிர்வேலா
கன்னித்தமிழ்க் காவலனே என்
கருத்துள்ளே கலந்திட வா
கனிவேண்டி நின்ற கனியே
தருவாயே தண்டமிழ்ச் செல்வா
தமிழ்மகனும் என்றனுக்கருள்வாய்!

## கலைமகள் வணக்கம்

என்றும் பிறவாத எழில் என்பர் உந்தனையும்
எப்போதும் பிறந்திடுவாய் நல் அகத்தில்
இன்றும் பிறப்பாய் என் அகத்தில் கலைமகளே
இதயத்துள் வேண்டுகிறேன் வருக வருக!

## திருமால் வணக்கம்

கார்முகில் நிறம் கொண்ட
கண்ணனே என் அகத்தில்
நீர் விட்டு துயில் நீங்கி
நேசமுடன் மிளிர வாராய்!

## • குரு வணக்கம்

தாய் மீது கொள்வது போல்
தமிழ் மீது அன்பு கொண்டு
சேய் நான் குருவைத் தேடி
திசை எலாம் சென்ற போது

தூய் உரு அமைந்த செல்வர்
துள்ளு தமிழ் § சாத்தாங்குட்டி
வாய் எலாம் தமிழ் மணக்க
வரமீந்தார் எனக்கிரங்கி

* * *

தொழுதிடுவேன் சாத்தாங்குட்டிப் பிள்ளையவர்
தூயஇரு திருவடிகள் தினமும்நான்
பழுதிலா தமிழதனை நிதம் பகர்ந்த
பாவலர் பழம்புலவர் தெங்கொம்பூரார்

வழுவிலா ஒழுக்கசீலர் வாய்மையாளர்
வாழ்முழுதும் தமிழுக்கே அளித்த தியாகி
உழுதொழில் உலகினில் நிற்குமட்டும்
• உத்தமராம் அவர் பெயரும் நிலைத்து நிற்கும்



§ தெங்கொம்புதூர் வாழும் தமிழ்க் கடல் தா, சாஸ்தாங்குட்டிப் பிள்ளை அவர்கள்

# சக்தி வணக்கம்

உலகத்து நாயகியே உனைப் பணிவேன்
உத்தரவு தரவேண்டும் எந்நனுக்கே
கலகத்தில் பிறந்திட்ட இவ்வுலகில்
கடமையை உணர்தற்கு அருள் புரிவாய்

எண்ணும் எண்ணமதில் நீ வருவாய்
எடுக்கும் கருமங்களில் நீ வருவாய்
பண்ணும் செயல்களில் நீ வருவாய்
பகலும் இரவுமே எனைப் பிரியாய்

மண்ணும் விண்ணும் உன் வடிவே
மழையும் புயலும் உன் வடிவே
எண்ணும் எழுத்தும் உன் வடிவே
எழிலும் இசையும் உன் வடிவே

எங்கும் உனையே காண்கின்றேன்
இதயத்தில் மட்டும் காண்கிலனே
அங்கும் உனையே காண்பதற்கே
அடியேன் என்செய வேண்டுமம்மா?

அகத்தில் உனையே அமர்த்தாமல்
அடைத்து நிற்பதும் யாதோதான்
ஜகத்தில் நிறைந்த மாதா நீ
தெளிவாய் உணர்த்த வேண்டுமம்மா!

உலக நாயகி:-

என்னைக் காண மனம் விரும்பி
எங்கும் தேடும் என் குழந்தாய்
உன்னில் காண வழியின்றி
உழலும் செல்வா சொல்வேன் வா

ஆசையென்னும் ஓர் கத உன்
அகத்தை அடைத்து நிற்குதப்பா
ஓசையின்றி அக் கதவினையும்
உடனே கழற்றி எறிந்து விடில்

ஓடி வருவேன் உன்னிடம் நான்
உன்னை உணர்வாய் உடன் நீயும்
தேடி அலைய வேண்டாம் கேள்
தேவன் ஆவாய் உண்மையடா!

பக்தன்:-

உண்மை உண்மை உணர்ந்தேன் நான்
உமையே உனதருள் கொள்வேனே
வெண்மை பெற வீண் ஆசையினை
விரட்டி உன் அடி தொழுவேனே!



# ஒரு கவிக்கு ஈடாமோ?

இலக்கியம் நானறியேன்
இலக்கணமும் நானறியேன்
துலக்கிட வழியறியேன்
தூயதமிழ் எழுத்தறியேன்

எண்ணியதை எழுதிவிட்டேன்
எண்ணுதற்குக் கொடுத்துவிட்டேன்
பண்ணியதை சுவைத்துலகே
பகர்வாய் நீ உண்மையினை

கண்ணுடிக் கல்லெடுத்து
கண் காட்டி வைரமென
எண்ணுமல் குழவி சொலின்
ஏற்பதுபோல் ஏற்றிடுவீர்

தாத்தா கவிஞர் இல்லை
தந்தையும் கவிஞர் இல்லை
ஆத்தா கவிஞர் இல்லை
அருட்கவியும் நானில்லையே

கண்டவற்றை மனம் ஏற்க
கருத்தினிலே வடிவு பெற
தண்டமிழில் வடித்தெடுத்தேன்
தனியாகப் பெற்றெடுத்தேன்

கற்பனையில் பறந்து சென்றேன்
கருத்தினில் சுழன்று வந்தேன்
சொற்களையும் அமைத்திட நான்
சொல்லொணாத் துயர் அடைந்தேன்

காலமது மாறி வரும்
கவின் பெருமை காணீரோ
கோலமது மாறி வரும்
கொள்கை கண்டு ஏற்பீரே!

இலக்கியத்தில் மிளிர் அழகே
இலக்கணம் என்பர் சான்றோர்
கலக்கமது இல்லை யெனில்
காணுவீர் அந்த உண்மை

மக்களைப் பெறும் துயரம்
மாதுயரம் என்றிடுவார்
ஒக்குமோ அத்துயரம்
ஒரு கவிக்கு ஈடாமோ?



# நாட்டு வணக்கம்

தென்கடல் அடிவருடும் நன்னாடு — எங்கள்
  தீந்தமிழ்த் திலகமிட்ட பொன்னாடு
வன்மலை வடதிசை கொண்டநாடு — எவர்க்கும்
  வாழ்வளிக்கும் பேறுபெற்ற பாரதநாடு

உலகுவாழத் தான்வாழும் உயர்நாடு — பல
  உத்தமரை உலகிற்கே தந்தநாடு
பலகலையும் பகிர்ந்தளித்த பாரதநாடு — வரும்
  பகைவர்களைச் சிதறடிக்கப் பாயும் நாடு

பல்புகழும் பண்புகளும் கொண்டநாடு — இந்தப்
  பார்வாழ வழிவகுக்கும் பாரதநாடு
இல்வாழ்வு துறவாழ்வு எவ்வாழ்வும் — சீர்
  இயற்கையொடு தொகுத்தளித்த ஒரேநாடு

என்றுமே நின்றுவாழும் எங்கள்நாடே — எழில்
  யாவுமே ஒருசேரப் பெற்றநாடே
நன்றியொடு உனைப்பணிவேன் நல்லதாயே—உலக
  நாயகியே உன்அடிக்கு சிரம்வைத்தேன்!



# வள்ளலார் வழி நடப்போம்!

வையகம் நன்முறையில் வாழவேண்டிற்
வள்ளலார் சன்மார்க்கம் வரவும்வேண்டும்
உய்வோம் நாம்எல்லாரும் உண்மையாமே
உலகீரே வள்ளலார் வழிநடப்போம்

உண்டென்போம் தெய்வம் ஒன்றென்போம்
ஒளியென்போம் அகஒளி காண்போம்
வண்டென மனம்அலையும் வழிஒழிப்போம்
வன்மையுடன் ஓர்குலமாய் வாழ்ந்திடுவோம்

அருட்பெரும் கருணையினை வழங்கிநாமும்
அன்பினால் உள்ளமதைப் பண்படுத்தி
மருள்வழியைக் கைவிட்டு ஒளிபரப்பி
மக்கட்குலம் வாழ்ந்திடவே நாளும்வாழ்வோம்

பிறப்பினிலே பேதமுண்டோ சொல்லிடுவீர்
பிளவெலாம் இடையினிலே வந்ததொல்லை
இறப்பினிலே பேதமுண்டோ இயம்பிடுவீர்
ஏனோபின் வாழ்வினிலே இடும்பை பல?

காணுகின்ற காட்சியெலாம் அவன்படைப்பு
கருத்தினிலே உணர்ந்துவிடில் பேதமறும்
பேணுகின்ற உயிர்உடலும் அவன்செல்வம்
பேதங்கள் நம்அகத்தில் ஏனோசொல்வீர்?



# தலைவா வா வா!

ஆடிடும் மனமதை அடக்க வாவா
அருளெனும் ஒளியினை கொடுக்க வாவா
தேடிடும் செல்வமே சிந்தையில் வாவா
தெள்ளறிவு நெறியினை தெளிக்க வாவா

பாடிடும் நாமணக்க பரிந்து வாவா
பகலவனாய் அகமது மிளிர வாவா
ஆடிடும் அறஒளியே அணைக்க வாவா
அறிவிலா ஏழைக்கே அருளவாவா

உன்அருள் எண்ணிட ஒளியாய் வாவா
உலகினை மறந்திட உருவாய் வாவா
என்அகம் மகிழ்ந்திட உடனே வாவா
எந்தையே அரசே எழிலே வாவா

மன்னகம் உயிர்களும் மகிழ வாவா
மாயையாம் பிறப்பற மருவி வாவா
தன்னலம் வேரறத் தந்தாய் வாவா
தாளினை வணங்கிடத் தலைவா வாவா



# உலகு உய்யவேண்டும்!

தாளம்: ஆதி

ராகம்: சக்ரவாகம்

பல்லவி

உலகு உய்ய வேண்டும் முருகா
உன் அருள் ஒளி பரவவேண்டும் — (உலகு)

அநுபல்லவி

தன்னலம் அகலவேண்டும் முருகா ஷண்முகா
தியாகிகள் பெருகவேண்டும் முருகா ஷண்முகா —(உலகு)

சரணம்

அறிவிலே மெய்யறிவு உள்ளறிவு
அறியாது வெளிப்பகட்டில் மயங்குகின்றார்
வெறியிலே அகமதையும் இருளாக்கி
வீணாகத் துயர்ஏற்கும் நிலைநீங்கி — (உலகு)



# வந்ததேனோ முருகா ?

பாதி இரவினிலே முருகா நீ
பக்கம் வந்ததேனோ —பாதி
தூக்கம் இழக்கவைத்தாய் முருகா-என்னை
துயருற வைத்ததேனோ —பாதி

கண்கள் உறங்கவில்லை முருகா
கருத்தும் உறங்கவில்லை என்
சண்முகா உன்முகமும் அகத்தில்
சயனம் கொண்டதப்பா-மேலும் —பாதி

உள்ளத்தை அடக்கியதில் முருகா
உன்னை நிலைக்கவைத்தும் என்
கள்ளமும் தினம்தினமும் மனதை
கலங்க வைப்பதை நீ தெரிந்தும் —பாதி

ஆசையை விட நினைத்தேன் முருகா
அதிசயம் மிக அடைந்தேன் என்
ஆசையும் முன்பை விட மிகவும்
அதிகம் ஆகுமுண்மை அறிந்தும் —பாதி



# வருங்காலம்........!

அழிப்பதற்கே ஆயுதங்கள் பெருகிப் போச்சு
அதுவுமொரு நாகரீகம் என்பதாச்சு
பழிப்பதற்கே வானொலியும் பயனாய்ப்போச்சு
பயத்திற்கே மனிதகுலம் அடிமையாச்சு

சூழ்ச்சியெலாம் அறிவுத்திறன் என்பதாச்சு
சுற்றமெலாம் பாரமென்ற நிலையுமாச்சு
வீழ்ச்சியெலாம் வெற்றியெனும் நெறியுமாச்சு
வெறிகளெலாம் வீரமென்று உளறலாச்சு

இன்னமும் ஐந்நூறு வருடங்கட்கே
இருக்கும் காண் இந்தநிலை உணர்ந்திடுவீர்
சொன்னவன் சொக்கனவன் மகன் நானில்லை
சொல்லிவிட்டான் என் அகத்தே நானும் சொன்னேன்

எழுபதாம் வருடமது கழிந்த பின்னே
எத்தர்களும் பித்தர்களும் திருந்துவார் பார்
பழுதிலா ஓர் கொடிக்கீழ் உலகு வாழும்
பண்பாளர் பலராவர் நெறிவளர்ப்பர்

திருத்திடவே வேறெவரும் வரவே வேண்டா
திருத்திடுவார் எல்லோரும் தன்னைத் தானே
கருத்தினிலே நிறுத்திடுவீர் கதிர்வேலன் சொல்
கடுகளவும் இக்கூற்றில் கலப்பேயில்லை!



# இன்பங்கள் வளர்ந்திடுமே இறையருளால் !

உலகெலாம் சுற்றி வந்தேன் எண்ணத்திஞல்
என்ருலும் உள்ளத்தில் அமைதியில்லை
பலகற்ற பெருமகஞர் அடிபணிந்தேன்
பக்குவமாய் தேற்றுதற்கே அறிந்தாரில்லை
நிலையில்லா இவ்வுலகில் இருப்போரெல்லாம்
நிலையான வழி காட்டார் என உணர்ந்தேன்
நிலவெனவே கடல் மீது பள்ளிகொண்ட
நீலமா மேனியனை வேண்டி நின்றேன்

வன பவள வாய்திறந்து வானவர்க்கும்
வழி காட்டும் கண்ணனும் முன்னே வந்து
சின பவள தாழ்சலங்கை ஒலி எழுப்பி
சிரித்தவா றென்னிடத்தே பேசலாஞன்
"எனதருளை வேண்டி நீ நின்றதேஞே
எதுவேண்டு மென்னிடத்தே கேளா"யென்ருன்
மனமுருகி மெய்சிலிர்த்து வணங்கியே நான்
மயக்கத்தில் தடுமாறித் திகைக்கலானேன்

"பொன்ஞேடு பொருளோடு போகமெலாம்
புவிமீது மலர்கின்ற இன்பமெலாம்
இன்னமும் இவைபோன்று உந்தனுக்கு
எதுவேண்டும் கேளெ"ன்று என்னை நோக்கி
கன்னலின் சுவை மிஞ்சு கனிவுடனே
கண்ணனும் நகைபூத்து மேலும் கூற
என்னுள்ளே எதைக்கேட்க என்று நானும்
ஏங்கியே நின்றிடினும் மறு கணத்தில்

"வேதத்தின் முன் நின்ற ஆதியே என்
வேதனைகள் தீர்த்திட்ட ஜோதியே உன்
பாதங்கள் என் விழிகள் காணின் போதும்
பாவங்கள் தானாக விலகியே ஓடும்
வாதங்கள் பல பேசும் இவ்வுலகில்
வரமொன்று எந்தனுக்கு நல்குவாய் நீ
பேதங்கள் ஒழிந்து நலம் விளையவே என்
பேனாவில் மையாய் நீ வந்தால் போதும்"

என்று நான் கேட்டவரம் உடன் கொடுத்தான்
ஏற்ற மிகு இலக்கியங்கள் படைத்திடவே
வென்றிடுமே காலங்களை எனது பேனா
வேதனைகள் தீர்த்திடுமே என் படைப்பு
கொன்று வாழ் இவ் வுலகை திருத்துமுண்மை
குவலயத்தில் சாந்தியதும் நிலவச் செய்யும்
இன்றுவாழ் வெறிமாற்றி கலி யுலகில்
இன்பங்கள் வளர்த்திடுமே இறையருளால்!



# பரம்பொருளாய் மாறினால்......!

கொண்டு வந்தோர் யாருமிலர்
 கொண்டு போவோர் யாருமிலர்
விண்டுரைத்தோர் பலராகும்
 விளக்கம் வேறு ஏதுக்கடா?

எண்ணி எண்ணி வருந்துவதேன்?
 எதுவும் உன்னால் நடந்திடுமோ?
மண்ணில் ஆசை பலகொண்டே
 மனதில் கவலைகள் ஏதுக்கடா?

ஆசை மூன்று உன்மனதில்
 ஆடிக்கூத்து நடத்துதடா
ஓசை வெளியில் கேட்குதடா
 உணரில் உனக்கும் தெரியுமடா

உன்னுள் ஒருவன் உனக்கென்றே
 ஒளித்தும் நேரில் இருப்பது காண்
தன்னுள் அவனைக் கண்டிட நீ
 தான் என்பதையே ஒழித்திடடா

உள்ளில் கர்வம் ஒழிந்து விடில்
 உண்மை ஒளியைக் காண்பாய் நீ
எள்ளில் எண்ணெய் இருப்பதுபோல்
 இறைவன் உன்னுள் இருக்கின்றான்

கண்டால் புறம் கூறமுடியாது
 கடினமாகும் உன் நாக்கு
உண்டால் உமிழ்ந்திட முடியுமோ சொல்
 உண்மை ஒளியாம் இறையருளை

அருளைப் பருகிய உடன் நீயும்
 அவனுடன் ஒன்றாய் கலப்பாய்பின்
பொருளை விளக்கப் போமோ பரம்
 பொருளாய் நீயும் மாறிய பின்!



# அடிமையாகேன் !

அன்பிற்கு அடிமையாவேன்
அன்னைக்கு அடிமையாவேன்
வன்பிற்கு அடிமையாகேன்
வம்பருக்கடிமையாகேன்

இசையினுக் கடிமையாவேன்
இறைவனுக் கடிமையாவேன்
வசையினுக்கு அடிமையாகேன்
வதந்திகட்கடிமையாகேன்

கடமைக்கு அடிமையாவேன்
கருணைக்கு அடிமையாவேன்
மடமைக்கு அடிமையாகேன்
மையலர்க்கு அடிமையாகேன்

கற்றோர்க்கு அடிமையாவேன்
கலைகளுக்கடிமையாவேன்
முற்றற்றோர்க்கடிமையாகேன்
மூடர்களுக்கடிமையாகேன்

தாய்நாட்டிற் கடிமையாவேன்
தமிழ்மொழிக் கடிமையாவேன்
ஏய்ப்போர்க்கு அடிமையாகேன்
ஏத்தருக்கு அடிமையாகேன்



# காலன் வருமுன் வருவாயே!

தானே உலகை உண்டாக்கி
தாவரம் பலவும் நீபடைத்து
மானைப் புலியின் பகையாக்கி
மாந்தர்க்குள்ளும் வெறி வளர்த்து
வானும் நிலமும் வேருக்கி
வாழ்வினையும் ஓர் புதிராக்கி
தானும் அறிய இயலாமல்
தலைவா எனையே ஏன் படைத்தாய்?

என்னை நீயே படைத்தாயே
ஏன் படைத்தாயெனக் கூறிடுவாய்
உன்னை அடைய உயிர்விட்டோர்
உண்மையில் உன்னை அடைந்தாரோ?
உன்னி உன்னி மந்திரங்கள்
உரைத்துரைத்து உனைக்காண
தன்னை அழித்த பெரியோர்கள்
தாளுய் உன்னை அடைந்தனரோ!

ஆதி அந்தம் அற்றவனே
அறத்தின் உருவாய் நிற்பவனே
ஜோதி ரூபச் சுடரொளியே
சோதனை நீயும் செய்வாயேல்
நீதி யறியா மானிடர்கள்
நின்னை மறந்து அறம்மறந்து
சூதும் வாதும் தொழிலாக
சூழ்ச்சி புரிவதில் தவறுண்டோ?

நெருப்பை மூட்டி நெய்விட்டு
நிமிர்ந்திருந்து கண் மூடி
விரும்பி உன்னை அடைவதற்கே
விழிகள் தன்னில் நீர் சொரிந்தும்
திருப்பம் சிறிதும் காணுமல்
திகைத்து நின்றதல்லாலுன்
செருப்பும் அவர்கள் கண்டனரோ
செப்பிடுவாய் என் இறையொளியே!

பாட்டிலும் உன்னையே தினம்வேண்டி
பாலொடு தேனும் பழம்சொரிந்து
நாட்டிலும் எங்கும் உன் நாமம்
நாளும் முனகிப் புகழ்பாடி
கூட்டிச் சேர்த்துப் பார்த்தபினும்
குழப்பம் மிகவும் தானடைந்து
காட்டில் வந்தும் உனைவேண்டி
கண்டார் எவரும் உண்டோசொல்?

உண்டு என்று உணர்கின்றேன்
உருவைக் காணத் துடிக்கின்றேன்
பண்டு துடித்த பலபேர்கள்
பாதம் காண முடியாமல்
விண்டு உரைத்த அறமொழிகள்
விளக்கம் சற்றும் தரவில்லை
கண்டு களித்துத் துதித்திடவே
காலன் வருமுன் வருவாயே!



# ஆத்ம சாந்தியே தெய்வமாகும்!

தானென்ற அகங்காரம் ஒழித்திடுவாய்
தன்னையே நன்றாக உணர்ந்திடுவாய்
ஊனெலும்பு உறவாடும் உயிரினையும்
உலகமதில் வாழ்வு நிலையினையும்
வானையும் பூமியதன் இயற்கையையும்
வாழ்விக்கும் அருளினையும் அறிந்திடுவாய்
ஏனென்று உள்ளேகேள் என்தோழா
எல்லாமே அதனுள் நிறைந்திருக்கு

ஒருவனே தெய்வமென உணர்ந்திடுவாய்
உத்தமனாய் உலகினில் வாழ்ந்திடுவாய்
பருவத்தில் பயிர்செய்து பயன்பெறுவாய்
பாரினில் பிறந்ததின் பலனதுவே
வருவோரும் செல்வோரும் பலராவம்
வந்தோரும் சென்றோரும் அவ்வாறும்
கருவதனை உணர்ந்தோரும் மிகச்சிலரே
கடவுளை அறிந்தோரும் அவ்வாறும்!

தெய்வத்தைத் தெளிந்திட இயலாதென
தீய வழியிலேன் செல்லுகின்றாய்?
தெய்வத்தை அறிந்திட முடியுமென
தெளிந்த அகத்துடன் நீநடந்தால்
வையத்தில் ' தெய்வமும் உன்முன்பு
வலியத் தோன்றி வழிகாட்டும்
ஐயமும் இதனுள்ளே ஏதுமில்லை
ஆத்ம சாந்தியே தெய்வமாகும்.



# நாதன் அருளைப் பெறுவாயே!

உள்ளிருக்கும் ஒன்றைத் தேடி
உலகெலாம் அலையும் அண்ணே
அள்ளிப் பருக முடியுமோ சொல்
அகத்திலுறை அருள் ஒளியை

நள்ளிரவினில் ஞாயிறொளி
நாளும் காண முடிந்திடுமோ
தள்ளி விடுவாய் அக இருளை
தானே அறிவாய் தனி ஒளியை

காடெதற்கு மலை எதற்கு
கல் உருவச் சிலை எதற்கு
வீடெதற்கு தெருவெதற்கு
வெட்டவெளியும் போதாதோ

இருளும் ஒளியும் ஒன்றாகி
இணைந்திருக்க முடிந்திடுமோ
மருளும் அண்ணே உணர்வாயே
மயக்கம் தெளிந்து முயல்வாயே

உள்ளைக் கடந்தால் ஒளி தெரியும்
ஊனைக் கடந்தால் வீடாகும்
மெள்ளக் கடந்தால் போதுமண்ணே
மெத்தக் கடந்தால் மேலோனும்

கடந்து கடந்து செல்வாயேல்
கடவுள் எதுவென உணர்வாயே
நடந்து நடந்து நலிவாயேல்
நாதன் அருளைப் பெறுவாயே!



# இயற்கை கண்டு அமைவீரே!

கவலை கொள்ளும் மானிடரே
கருத்தாய் ஊன்றிக் கவனிப்பீர்
புவனந்தன்னில் நீவீர்கள்
பிறந்ததேனோ சொல்வீரே

அன்று செய்த செயலெல்லாம்
அளித்த பேறே இப்பிறவி
இன்று வருந்திப் பயனுண்டோ
ஏங்கி அழுவதும் தவறன்றோ

பிறப்பு என்னும் பேற்றினையே
பெரிய பேருய்க் கொள்வோரே
இறப்பு என்னும் இன்பத்திற்
கீடு உண்டோ சொல்வீரே

கர்மம் செய்து பிறந்தோமே
கவலைப் படுவது அறிவீனம்
மர்மம் இதிலே ஏதுமில்லை
மாயம் இல்லை உணர்வீரே

செய்யும் பணியைச் செய்திடுவீர்
செயல்கள் எதிலும் நாமில்லை
கையும் காலும் நமதில்லை
கருத்தும் நமது இல்லையன்றோ

கொண்டு விட்டவன் யார் சொல்வீர்
கொண்டு போவான் யார் சொல்வீர்
விண்டு உரைக்க முடியுமெனில்
விதியை வென்றவர் ஆவீரே!

கருத்தைப் போட்டுக் குழப்பாதீர்
கவலை கொண்டு வருந்தாதீர்
பொருத்த மெண்ணிப் புலம்பாதீர்
பொழுது போக்கில் கலங்காதீர்

போகச் சொன்னான் வந்தீரே
புறப்படச் சொல்லப் போவீரே
ஏகன் என்பவன் இருக்கின்றான்
எண்ணி அவனை உணர்வீரே

உணர்வில் அவனைக் கண்டிடவே
உயிரை விட்டோர் பலராகும்
கணமும் அவனைக் காணாது
கலங்கி அலைந்தோர் கணக்குண்டோ!

தேடித் தேடி அலைந்தோர்கள்
தெரிந்ததெல்லாம் எழுதி வைத்தார்
பாடிப் பாடிப் பறந்தோர்கள்
பாரே அவனுரு என்றார்கள்

இசையும் அவனே என்றார்கள்
இதயம் அவனே காணென்றார்
திசையில் கிழக்கே பார் என்றார்
திரும்பத் திரும்ப நினையென்றார்

எல்லாம் அவனே என்றோர்கள்
ஏனோ அவனைக் காணவில்லை
தொல்லை வேண்டா என்றெண்ணி
தொகுத்துச் சொல்லி நழுவினரோ!

உலகம் செய்த ஒருவனும் தான்
உணரும் அறிவைக் கொடுத்தானே
கலகம் ஏனோ நமக்குள்ளே
கருத்தில் ஏனோ குழப்பங்கள்

நமக்கு முன்னால் வந்தோர்கள்
நாளும் குழம்பி மடிந்தார்கள்
நமக்கு மேனோ அத்தொல்லை
நடக்கிறதெல்லாம் நடக்கட்டும்

துன்பம் கண்டு வருந்தாதீர்
துயரம் கண்டு கலங்காதீர்
இன்பம் கண்டு மகிழாதீர்
இயற்கை கண்டு அமைவீரே!



# மாருதத்து

தான் என்ற எண்ணத்தை விட்டுவிடு
தன்னாலே நீங்கிவிடும் உனதுதுயர்
ஊன்உடல் என்பதுவும் நீயோ — அன்று
உயிர் உணர்வென்பதும் நீயோசொல்

மனம்என்று சொல்வதுவும் யாரேசொல்
மரணமது என்பதுவும் உனக்கோசொல்
இனம்பல பிரித்திடவும் நீயாரோ
இவ்விடம் வருமுன்பு இடம்யாதோ

குறைநிறை என்பதெலாம் நினைவின்மேல்
குறைவற்ற இடமேது உள்ளத்தினுள்
சிறைவெளி என்பதெலாம் புறத்தோற்றம்
சிந்தைகளை ஒன்றுக்கும் உள்ஒளியும்

உயர்வென்றும் தாழ்வென்றும் எதுவுமில்லை
உண்மையினை உணர்ந்தோரும் அறிவர்உண்மை
அயர்வென்றும் உழைப்பென்றும் எதுவுமில்லை
அவரவரின் மனமதுவே காரணமாம்

தினம்தினம் மாறிடுமே இவ்உடலும்
சிந்தனையும் மாறிடுமே கணம்கணமும்
வனம்கடல் எல்லாமே மாறுமுண்மை
வற்றாத ஆத்மாவே மாறாதுண்மை.



# ஏனோ சோதனைகள்?

நீயே பிறக்க வைத்தாய்
நீயே அழவும் வைத்தாய்
நீயே சிரிக்க வைத்தாய்
நீயே இன்பம் வைத்தாய்—இறைவா (நீயே)

நீயே கவலை வைத்தாய்
நீயே கலங்க வைத்தாய்
நீயே அன்பு வைத்தாய்
நீயே அருளை வைத்தாய்—இறைவா (நீயே)

எல்லாப் பருவமும் உன்னதுவே
எல்லா செயல்களும் உன்னதுவே
எல்லா நிலைகளும் உன்னதுவே
ஏனோ என்னை கலக்குகின்றாய்—இறைவா (நீயே)

கேள்விகள் கேட்பதுவும் நீயன்றோ
கிடைக்கும் பதில்களும் நீயன்றோ
தாழ்வும் உயர்வும் உன்செயலே
தலைவா ஏனோ சோதனைகள்—இறைவா (நீயே)



# மகாபலிபுரம்

கடல் அலையின் அழகும் அழகோ
கான்மயிலின் அழகும் அழகோ
மட மானின் அழகும் அழகோ
மாமல்ல கலையின் அழகே அழகு

கல்லில் கலையை வடித்தெடுத்து
கற்பனைக் குயிர் கொடுத்துவிட்டான்
சொல்லில் உரைக்கமுடியுமோ சொல்?
சுந்தர சிற்ப அழகொளியை

பசுவில் பாலைக் கறப்பதுபோற்
பாவை இருக்கும் ஒரு தோற்றம்
விசும்பின் கூட்டம் திரண்டாற்போற்
வீரயானைகள் மறுதோற்றம்

ஐந்து ரதங்கள் அழகுருவம்
ஆன்றோர் திறனை எடுத்துரைக்கும்
பைந்தமிழ் சிற்பக் கலைத்திறனை
பாரே அறியப் பறைசாற்றும்

புள் பல கல்லில் வடித்தெடுத்து
புதுமைகள் பலவும் படைத்தளித்து
தெள்ளிய உருபல சமைத்திட்டான்
தெவிட்டா இன்பம் இன்பமடா!



# அன்னையவள் அடிதொழுவோம்

பாரார் போற்றிடும் பாவை
பண்பாளர் உணர்ந்திட்ட மேதை
தாரார் வேந்தர்கள் மூவர்
தம்முயிராய் வளர்த்த பூவை

என்றுமே அழியாத தெய்வம்
எழிலே குறையாத செல்வம்
கன்றிய கனியே யனினும்
காலத்தை வென்ற மாதா

குறளெனும் செல்வம் கொடுத்தாள்
குன்றாத புகழினைத் தொடுத்தாள்
புறம், அகம், பரணி போன்று
புதுமைகள் பலவும் பெற்றாள்

ஆதிசிவன் பெற்ற குழவி
அகிலத்திற்கே முதல் அன்னை
சாதிப் பிரிவு அவட்கில்லை
சாகரம் வணங்கிடும் தேவி

அகத்தியன் வளர்த்த செல்வி
அறிவுக் கலையின் ஆழி
ஜெகத்தினில் ஈடு இணையற்றாள்
செருக்கே இல்லாத தெய்வம்

தாய்க்கும் மேலான தாயாம்
தமிழை மறக்கப் போமோ
செய்க்குலம் தழைக்க வேண்டிற்
தெருவெலாம் அவளைப் போற்று

தமிழெனும் பெயரைக் கொண்டாள்
தனித்தே நின்று வளர்ந்தாள்
அமிழ்தென உயிரைக் காப்பாள்
அன்னையவளடி தொழுவோம்.



# தாயன்பு

அன்பினில் பேரன்பு தாயன்பு — அதை
அறியார் அகிலத்தில் இருப்பதுவம்பு
தன்னலம் இல்லாத தாயன்பு — இத்
தரணியை வாழ்விக்கும் தனியன்பு

குழந்தையை உயிராய்க் காத்துநிற்கும் — தன்
குலவிளக்கென்று போற்றிநிற்கும்
பழந்தமிழ் மணத்தில் நிதம்பாடும் — தாலாட்டில்
பரிவின் ஒளியும் தவழ்ந்துநிற்கும்

ஊக்கம் கொடுத்து உணவூட்டும் — பதில்
ஊதியம் கருதாது நிதம் உழைக்கும்
ஆக்கம் அறிவு அன்பு புகட்டி — தினம்
அறுசுவை உண்டியும் மகிழ்ந்தளிக்கும்

அறம் வளர்ப்பது தாயன்பு — உலகில்
அன்பு வளர்ப்பது தாயன்பு
மறம் வளர்ப்பது தாயன்பு — மக்களை
மகான் களாக்குவதும் தாயன்பு

தாயன்பிற்குத் தலை வணங்கிடுவோம் — இத்
தரணி செழிக்க நாம் உழைப்போம்
தீயகுணங்கள் உடன் தவிர்ப்போம் — தினம்
தீந்தமிழ்ப்பாடி சேர்ந்து வாழ்வோம்!



# எவ்வழியும் நல்வழியாம்

பெற்றதாய் வாட்டம் பெரிதெனவே என்றாலும்
பெரியோர் பழித்தசெயல் புரிந்ததைத் தீர்க்கலாமோ?
உற்றவர் உறவினர் துயரமதில் உழன்றாலும்
உள்ளத்தைவிற்று அவர் உறுதுயர் தீர்க்கலாமோ?

கற்பித்த ஆசான் கடவுளாம் என்றாலும்
கருணையில் வழிசென்று அவர்கடன் தீர்க்கலாமோ?
இற்பிறப்பில் கூடாது ஆனால் தாய்மொழிக்கு
இடையூறு வரும்போது எவ்வழியும் நல்வழியாம்.



# தனிமையே இனிமை

உங்களை நீங்கள் அறிவதற்கும்
உணர்ச்சியை அளந்து கணக்கிடவும்
திங்கள் போன்று ஒளிவிடவும்
தீரனாகவும் தனித் திருங்கள்

சிந்தனை அறுபடும் பேச்சினிலே
சிந்தை தெளிவுறும் தனிமையிலே
பந்தம் பதவியும் புரிந்துவிடும்
பாரின் இரகசியம் தெளிவாகும்

தன்னை அறிந்திட அச்சமுற்றே
தாவிப் பறக்கிறார் பிறர்நடுவே
என்ன எதுவென தெளிந்திடவே
ஏகாந்த நிலையினை நாடிடுவீர்

உலகினை அறிய உதவும்தனிமை
உள்ளம் தெரிய உதவும் தனிமை
நிலவும் மாயையும் புரியவைக்கும்
நீதி எதுவென உணரவைக்கும்

தான்செய்த தீமை தெளிவாகும்
தன்னைத் திருத்திப் பண்படுத்தும்
கான் நடு செலவும் வேண்டாமே
கருத்தொன்று மிடம் போதுமய்யா!



# பொருந்தி வாழ முடிந்திடுமோ?

அருளின் உருவாய் ஆனவனே
அருளே ஒளியாய் நிற்பவனே
அருளாம் செல்வம் தருபவனே
அருளுடையோர்க்கு அருள்பவனே
அருளின் பொருளை அறிந்திடவும்
அருளின் வழியே நடந்திடவும்
அருளே உனையே துதிக்கின்றேன்
அருளை அருள்வாய் அருள்ஒளியே!

மருளும் உலகில் படைத்தவனே
மருளும் எனையே காத்திடுவாய்
மருளும் உலகில் பிறந்ததினல்
மருளின் மருளில் சுழல்கின்றேன்
மருளும் அருளும் அறியாது
மருண்டு மருண்டு திகைக்கின்றேன்
மருளும் உலகம் தனைவிட்டு
மருளா உலகைக் காட்டிடுவாய்

அருளின் ஒளியது தோன்றுமல்
அடியேன் எனது உள்ளத்தில்
இருளும் விலகி ஓடிடுமோ?
இறைவா உனக்குத் தெரியாதோ
பொருளும் புகழும் நீயன்றே
புவனம் உனது படைப்பன்றே
அருளைக் காணுர் அகங்காணுர்
அறமில்லாத அருளுண்டோ?

அருளில்லார்க்கு உன் அடியில்
அணுவளவேனும் இடமில்லை
பொருளில்லார்க்கு இவ்வுலகில்
புகலிடமே எதுவுமில்லை
தெருளாளன் என எண்ணுதே
தெரிந்துகொள்ள விழைகின்றேன்
பொருளும் அருளும் ஓரிடத்தில்
பொருந்தி வாழ முடிந்திடுமோ?



# உயிரும் கொடுப்பான்

வித்திட்டு வளருகின்ற செடியை
வீணாக்கி அழித்திடும் கால்நடைகள்
பத்திரமாய்க் காத்திட வேலியினை
பலமாய் அமைத்திடில் வளருங்காண்

வளர்ந்திட்ட மரமது பின்பு
வளர்க்கும் கால்நடை பலவாம்
தளர்ந்திட்ட பின்பும் நமக்கு
தன்னையே வழங்கி உதவும்

இளமையில் தீயோர் சேர்க்கை
இம்மியும் ஒட்டாது வளர்த்தால்
இளமையில் கெடுக்கத் துணிந்த
எவரையும் திருத்திடத் தகுவான்

நல்மரம் போற் பயனுவான்
நானிலம் வாழ உழைப்பான்
பல்திறம் காட்டி உயர்வான்
பாருக்கே உயிரும் கொடுப்பான்.



# குழந்தைகளே!

அணுக்குண்டு யுகத்தில் பிறந்தவரே
அன்பின் பலனாய் வந்தவரே
பிணக்கினை ஒழித்து வளர்வீரே
பிள்ளைகளே நற் செல்வர்களே

பூவின் அழகும் இணையாமோ
பொன்னின் மதிப்பு ஈடாமோ
ஆவின் கன்று அழகாமோ
அன்புக் குழவிகாளுங்களுக்கே

அன்பை தினமும் வளர்த்திடுவீர்
அறத்தை உணர்ந்து வளர்ந்திடுவீர்
இன்பம் எதுவென கண்டிடுவீர்
இயற்கை நெறியில் வாழ்ந்திடுவீர்

வானில் பறக்கும் ஊர்திகளும்
வையம் சுற்றும் கப்பல்களும்
நானிலம் நடுங்கும் பேய்க்கணையும்
நாங்கள் கண்ட புதுமைகளாம்

சந்திர மண்டலம் செல்வதுவும்
சாதனை அங்கு புரிவதுவும்
இந்திர லோகம் சுற்றுவதும்
இயந்திர வாழ்வு(ம்) உம்காலம்

அறிவால் உயர்வீர் குழந்தைகளே
அந்த வேலையும் மறவாமல்
குறியாய்க் கொள்வீர் மனவளர்ச்சி
கொள்கையுமதுவே மறவாதீர்.



# அருள் வேண்டுமா?

அல்லும் பகலும் மனங்கலங்கி
ஆசைப் பேய்க்கு அடிபணிந்து
தொல்லை பலவும் தினம் ஏற்று
தூக்கம் கூட சரியின்றி
எல்லாம் ஏமதென்றெண்ணுமல்
எல்லாம் பிறவே என்றெண்ணி
'இல்லை இறைவன்' என்றியம்பும்
எந்தன் தோழா இங்கேவா

உலகில் நீயும் ஓர் அங்கம்
உணரில் உன்தன் மனம் தங்கம்
பலவும் அவனே என்றெண்ணு
பகவான் படைப்பு எனநம்பு
நிலமும் நீரும் அவனேதான்
நீயும் அவனது அணுவேதான்
உலகை உனது என்றுணரில்
உடனே இன்பம் நீபெறுவாய்

சொல்லில் தூய்மை மிளிரச்செய்
சோம்பலைத் தூர விலக்கிவிடு
கல்வியை அள்ளிப் பருகிவிடு
கலையினைக் கண்டு மனம்மகிழு
நல்லான் எனநீ வாழ்ந்துவிடு
நலங்கள் பலவும் நாடிவரும்
அல்லல் தானாய் ஓடிவிடும்
ஆண்டவன் அருளும் உடன்கிட்டும்!

# பெரியதும் சிறியதும்

பெரியதென்றும் சிறியதென்றும்
பிரித்துவைத்துப் பார்ப்பதற்கே
அரிய செயல்; இவ்வுலகில்
அப்படி ஓர் பிரிவுமில்லை
உரியதென்று கொள்வதற்கே
உலகில் எதுவும் இலை உண்மை
சரியாய் உணரில் எப்பொருளும்
சமமாய் உனக்குத் தெரியுமடா

குறுகிய சிற்ருேடை ஒன்ருனல்
குளங்களை நிறைக்கும் ஆருகும்
அறுகம் புற்கள் பல சேர்ந்தால்
ஆவின் பசியைத் தீர்த்துவிடும்
சிறுசிறு வைக்கோல் தீகொண்டால்
ஜெகத்தை எரிக்கும் நெருப்பாகும்
எறும்புகள் பலவும் ஒன்ருனல்
யானையைக் கூட இழுத்துவிடும்

சிறிய இரும்புளி பெருமலையை
சிறுகச் சிறுக உடைத்துவிடும்
தறுகண் கரியும் மூங்கிலுக்கு
தாளுய் அடங்கிப் பணிந்துவிடும்
குறுகுறு வென்ற குழவியதும்
குவலயம் ஆளும் மன்ஞகும்
சிறியதிலிருந்து வளர்ந்ததுவே
சீரும் சிறப்பும் செல்வமெலாம்

நாட்டைப் பிரிக்கும் கடலதுவே
நாட்டை ஒன்றாய் இணைப்பதுவாம்
வீட்டைப் பிரிக்கும் தெருவதுவே
வீட்டை ஒன்றாய் இணைப்பதுவாம்
காட்டைப் பிரிக்கும் மலையதுவே
காட்டை ஒன்றாய் இணைப்பதுவாம்
கூட்டைப் பிரித்த உயிரதுவே
கூடிப் பிரிந்தோர் பிறப்பெடுக்கும்

மேட்டைப் பிரிக்கும் பள்ளமதே
மேட்டை இணைத்து வழிகாட்டும்
ஓட்டை விழுந்த பாண்டமதே
உண்மையிற் பிரிந்தோர் கூலமாகும்
பூட்டைப் பூட்டும் சாவிகளே
பூட்டைத் திறக்க உதவிநிற்கும்
சூட்டை வளர்க்கும் காற்றதுவே
சூட்டை அணைக்கத் துணைபுரியும்

எல்லாம் சிறிதே எல்லாம் பெரிதே
ஏனோ நம்முள் குழப்பங்கள்
எல்லாம் பிரிவே எல்லாம் இணைப்பே
ஏனோ மனதுள் பேதங்கள்
எல்லாம் வல்ல இறைப் படைப்பை
ஏனோ நம்முள் பிரிக்கின்றோம்
எல்லாம் நடப்பது அவனருளே
ஏனோ நம்முள் ஆணவமே!

எள்ளினுள்ளே எண்ணெயதாம்
இருக்கும் மாயம் அறியீரோ
கள்ளைக் கொண்ட மலர்களினுள்
கனியும் பேரழகறியீரோ
வெள்ளைக் கறுப்பு பேதமெல்லாம்
விழிகள் காட்டும் தோற்றமதே
உள்ளே சமத்துவ ஒளிதோன்றிற்
உலகில் சமத்துவ ஒளிதெரியும்

# இயற்கை நெறியும் அதுதானே!

கூடி வாழப் பிறந்தோர்கள் — மனிதர்
கொள்கையோடு வாழ்ந்தோர்கள்
மூடிய மனக்கண் திறந்திடுவோம் — நம்
முன்னோர் நெறியினை உணர்ந்திடுவோம்

குடும்பங் குடும்பமாய் வாழ்ந்தோமே —இன்று
கூறு கூருய்ப் பிரிகின்றோம்
இடும்பை சற்றும் அன்றில்லை — இன்று
இதயம் இரும்பாய் மாறியதே

பசியை மறந்து பிறர்வாழ — அன்று
பகிர்ந்து கொடுத்த மனிதகுலம்
புசிக்கும் பிறருடை உணவினையும் — இன்று
பிடுங்கி உண்ணத் துடிக்குதடா!

உணவு விடுதி செல்வதையே — அன்று
உண்மையில் இழிவெனக் கொண்டார்கள்
உணவு விடுதிகள் நம்முன்னே — இன்று
உற்பத்தி பெருகி வருகுதடா

குடும்பம் தகர்வதன் எதிரொலியே — இன்று
கூடும் உணவு விடுதிகளாம்
சடுதியில் இம்முறை மாற்றேமேல் — நாடு
சரிந்து கீழே போய்விடுமே!

அன்று நிலவிய நாகரீகம் — மக்கள்
அனைவரும் கூடி வாழ்வதுவே
இன்று நிலவும் நாகரீகம் — பிரிந்து
இழிவு வாழ்வு வாழ்வதுவே

பண்டைய பண்பு போதுமய்யா — சேர்ந்து
பயன்மிகு புதுமையும் ஏற்போமே
அண்டைய வீடும் சொந்தமய்யா — அதை
அறிந்து ஒன்றாய் வாழ்ந்திடுவோம்

அன்பே அரிய செல்வமய்யா — அது
ஆன்றோர் வகுத்த அறநெறியாம்
இன்பம் அதிலே பெருகுமய்யா — உலக
இயற்கை நெறியும் அதுதானே!



# வண்ண மலரே சொல்லிடுவாய்!

வாட்டமில்லா குழவியைப்போல்
வட்ட நிலா வடிவினைப்போல்
தோட்ட நடுவில் சோலைக்குள்
தோன்றிச் சிரிக்கும் நறுமலரே
தேட்ட மெதுவோ கூறிடுவாய்
தெரிந்த தெல்லாம் சொல்லிடுவாய்
மாட்டே னென்று மறுக்காதே
மாலை நேரம் வந்துவிடும்

காலைக் கதிரோன் ஒளியேற்று
களிப்புடன் சிரிக்கும் மென்மலரே
வாலைக் குமரியைப் போல்மிளிரும்
வண்ண மலரே வடிவழகே
மாலை வருமென் றெண்ணுமல்
மலர்ச்சி மிளிர மகிழ்கின்ருய்
மாலை வேளை வந்துவிடில்
மலரே நீயும் மடிவாயே

உலரும் தன்மை உணராமல்
உலகிலுன் போல் எத்தனையோ
பலரும் மயங்கித் திரிகின்ருர்
பார்த்தும் உணரா மானிடர்கள்
மலரே நீயும் அவர்போன்று
மறந்து ஏனே சிரிக்கின்ருய்
புலர்ந்த வேளை போய்மறையும்
புரிந்து கொள்வாய் நல்மலரே!

வையம் எமதே என்றிடுவார்
வானையும் அளந்து கணக்கிடுவார்
செய்ய அரிய பலதொழில்கள்
செய்து முடித்துக் காட்டிடுவார்
எய்வேன் கணைகள் என்றிடுவார்
எவரையும் அச்சமூட்டிடுவார்
அய்யோ அவர்தம் உயிரினை யும்
அரைநொடியும் நிறுத்தி வையாரே!

வண்ண மலரே இவ்வுண்மை
வையம் நன்கு தெரிந்தாலும்
எண்ணப் போக்கில் தனைமறந்து
ஏனோ தீமைகள் புரிகின்றார்
கண்ணைக் கவரும் கவின்மலரே
காரணம் உனக்கு சொல்லிடுவேன்
விண்ணை மூட்டும் ஆசையலால்
வேறு காரணம் உண்டோசொல்!



# இணைந்திடுவோம்

வந்தோர்க் கெல்லாம் இடங்கொடுத்து
வாரி வாரி வழங்கிவிட்டு
சொந்தங்கொண்டு குலவிப் பின்பு
சுகவாழ்வுக் கிடங் கொடுத்து
மந்தநிலைக்கு வந்து விட்டாய்
மறத் தமிழர் பரம்பரையே
இந்த நிலை இனிமேலும் மேலும்
எத்தனை நாள்தான் நீடிக்குமோ?

உன்னை நீயே சுரண்டுகின்றாய்
உரிமை விட்டே கொடுக்கின்றாய்
அன்னை மொழியாம் தமிழமுதை
அகில முழுதும் பரப்பாமல்
தன்னைத் தானே நீமறந்து
தனக்குள் தானே பகைவளர்த்து
இன்னும் அழிந்து போவாயோ
ஈடில்லாத பரம்பரையே!

சுதந்திரம் பெற்றபின் இன்னும்
சூடு உனக்கேன் எழவில்லை
பதவி வெறியாலுன் பண்பினையும்
பறக்க விட்டுக் கெடுவாயோ
நிதமும் கட்சி அமைத்தபடி
நீயும் கெட்டு அழிவாயோ
இதமாய்ச் சொல்வேன் உடனுணர்வாய்
இன்றே ஒன்று சேர்ந்திடுவாய்

பாரின்மீது உன் மரபே
பண்டை நாளில் சிறந்ததுவே
யாருமிதனை மறுத்ததில்லை
ஆனால் நீயோ மறந்துவிட்டாய்
தேரின் தெளிவாய் உணர்வாயே
திகைத்து ஏனோ நிற்கின்றாய்
வாரீர் ஒன்றாய் என்றழைத்து
வாழும் வகையை உணர்த்தாயோ!

அலைகள் தம்முள் அடித்திடினும்
ஆழியை விட்டுப் பிரிந்திடுமோ
சிலைகளாக நாம் இருந்தால்
சிதறிப் பிரிந்தே போய்விடுவோம்
கலைகளில் உயர்ந்த தமிழ்மரபும்
கட்சிகளால் இன்று பிரிந்ததுவே
தலைவர்கள் பலரே என்றாலென்?
தமிழர்கள்தானே இணைந்தாலென்?

இனத்தைக் காக்கவே மறக்காதே
இன் தமிழ்மொழியை இகழாதே
தனத்தை அறிவுக்கே செலவிட்டு
தமிழொடு பிறமொழி நிதம்படித்து
மனத்தை விரிவாய் ஆக்கிக்கொள்
மறந்து போனால் நமக்கழிவே
புனலின் தன்மை கெட்டதன்பின்
புவியில் வாழ இடமுண்டோ

பிரிவினை வாதம் பேசாதே
பிரிந்து வாழவே எண்ணாதே
கரியின் இனமே என்றாலும்
காட்டில் தனியாய் வாழ்ந்திருந்தால்
நரியும் கூட வென்றுவிடும்
நாயும் கூட எதிர்நிற்கும்
உரிமை வேண்டி வாழ்வதற்கே
ஒற்றுமை வேண்டும் உணர்ந்திடுவாய்!

# சிறுவனும் அறிவில் உயர்கின்றான்

அழகும் ஒளியில் கூடுதடி
அன்பும் உறவில் பெருகுதடி
உழவும் உழைப்பில் சிறக்குதடி
உணவும் பசியில் ருசிக்குதடி

காதலும் பிரிவில் கனியுதடி
கவலையும் நகைப்பில் பறக்குதடி
மாதரும் நாணில் சிறக்கின்றார்
மலரும் மணத்தில் உயருதடி

அறிவும் ஒழுக்கத்தில் பொலியுதடி
அகமும் பக்தியில் விரியுதடி
வெறியும் அன்பில் அடங்குதடி
வெற்றியும் முயற்சியில் பெருகுதடி

ஆசையும் தேவையில் பிறக்குதடி
அருளும் சேவையில் முதிருதடி
ஈசனும் பூசையில் சிறக்கின்றான்
இன்பமும் பெண்மையில் விரியுதடி!

கலையில் மண்ணும் சிறக்குதடி
கருமமும் சேவையில் ஒளிருதடி
சிலையும் கோயிலில் சிறக்குதடி
சிறுவனும் அறிவால் உயர்கின்றான்



# இயன்றமட்டும் படித்திடுவோம்

துன்பம் யாவும் நீங்கிடவும்
தூய மனமது துலங்கிடவும்
இன்பம் நல்க என்றும்
இனிய உணர்வு அளித்திடவும்
அன்பால் என்றும் உலகெல்லாம்
அறிவு சிறந்து விளங்கிடவும்
அன்னை மொழியாம் தமிழதனை
அகத்தில் கொண்டு வளர்த்திடுவோம்

இந்தி மொழியையும் கற்றிடுவோம்
இன்னும் பலபல மொழிகற்போம்
எந்த மொழியும் நல்மொழியாம்
எல்லாம் அறிவைத் தருமொழியாம்
பந்தம் நமது தமிழ்மொழியில்
பாசம் வைப்போம் பிறமொழியில்
இந்த உண்மை மனங்கொள்வோம்
இயன்றமட்டும் படித்திடுவோம்.



# உணர்ந்தேனே

இரவினில் மெழுகுத்திரி ஒன்று
எரிந்து தன்னை அழிப்பதையே
அருகினில் இருந்து நான் கண்டேன்—தன்னை
அழித்த பண்பில் உளம் நெகிழ்ந்தேன்

பிறரை அழித்துத் தான்வாழும்
பிற்போக்காளர் நடுவினிலே
உறவே இன்றி பிறர்வாழ — தன்
உயிரைக் கொடுப்போர்தனை நினைந்தேன்

ஒளிர்ந்த ஒளியின் உள்ளேயே
ஓர் கறுப்பு நான்கண்டேன்
மிளிர்ந்த தியாகிகள் எல்லோரும் — தன்
மனத்துயர் மறைத்ததை நன்குணர்ந்தேன்

திரியது எரிந்து முற்றியபின்
மெழுகுத்துளிகள் சில கண்டேன்
அரியது செய்து மறைந்தவர்க்கு — உலகு
அஞ்சலி செய்வதை நான்தெரிந்தேன்

உலகில் பிறப்பதும் மறைவதுவும்
உலகில் காணும் இயல்பேதான்
உலகில் மெழுகுத் திரியினைப்போல் — சிலர்
உண்மையில் வாழ்வதும் உணர்ந்தேனே!



# ஆறினைக் கூறிட வாராயோ!

எங்கும் நிறைந்திருக்கும் காற்றே — நீ
எங்கிருந்து வந்தாயோ காற்றே
தங்கா இடத்திலுயிர் தங்கா — எங்கும்
தவழ்ந்து விளையாடும் காற்றே

மிதி வண்டி ஓடுது உன்னருளில் — கடல்
மீன்களும் வாழும் உன் தயவில்
நதிகள் பாய்வதும் உன்னாலே — உலகில்
நறுமணம் விரிவதும் உன்னாலே

புள்ளினம் பறக்குது உன்மீது — நாளும்
புதுமைகள் பிறக்குது உன்னாலே
அள்ளி அணைத்திட விழைகின்றேன் — உன்
அழகுரு காண முடியலையே

இலைகள் அசைவதும் உன் தயவில் —இயற்கை
இன்பங்கள் விளைவதும் உன்னாலே
அலைகள் தவழ்வதும் உன் தயவில் — கப்பல்
அசைந்து செல்வதும் உன்னாலே

சிறுதீ அணைவதும் உன் ஆணை—நெருப்பு
சீற்றம் கொள்வதும் உன்னாலே
சிறுகுடில் வாழ்வதும் உன் நிறைவில் — அது
சிதைந்து அழிவதும் உன்சினத்தில்

உலகின் அழகெலாம் உன்னாலே — அவை
உருக்குலைவதும் உன்னாலே
கலகம் நடப்பதும் உன்னாலே — பல
கயவரும், வாழ்வது உன்னாலே

ஐந்திலே ஒன்றாய் ஆனதுவே — மேல்
ஐந்திலே நான்கைக் காப்பதுவே
ஐந்திலே முதன்மை பெற்றதுவே — வந்த
ஆறினைக் கூறிட வாராயோ!



# புல்

முத்துக்களை குடையாய்ப் பிடித்துநிற்கும்—வெயிலில்
மோகனப் புன்னகைப் பூத்துநிற்கும்
மெத்தையாய் மென்மை அளித்துவரும் — தொடில்
மெதுவாகத் துவண்டு மடங்கிவிழும்

கால்நடைப் பசியினைப் பறக்கடிக்கும் — மழைக்கு
காத்திருந்தே பொறுமை காட்டிநிற்கும்
பால் எனும் உணவாகிக் குழவிகட்கும் — அரும்
பசியைப் போக்கிப் பலமூட்டும்

பச்சைப் பசேலெனப் பரிமளிக்கும் — இப்
பாரில் இல்லா இடமில்லை
துச்சம் என நீ தள்ளவேண்டா — பிணிக்கும்
தூய மருந்தா(க) மாறிவரும்

இரண்டெழுத்தில் பெயர் தாங்கி — இங்கு
எல்லோருக்கும் தெரிய நிற்கும்
மிரண்டு மிரண்டு விழிக்காதீர் — தரை
மீது வளரும் புல்தானே



# அழகு

பெண்ணிற் கழகு நாணம் — பெரும்
பொய்கைக் கழகு மீன்கள்
பண்ணிற் கழகு இராகம் — நன்கு
பாடுவோர்க் கழகு தாளம்

கவிதைக் கழகு கருத்து — நற்
கவிஞர்க் கழகு உணர்ச்சி
நவிதற் கழகு தண்மை — உயர்
நல்லோர்க் கழகு நேர்மை

அறிஞர்க் கழகு அடக்கம் — நல்
ஆட்சிக் கழகு செழிப்பு
வறிஞர்க் கழகு செம்மை — நல்
வாழ்வனுக் கழகு சேவை.



# உழைப்பின் சின்னம்!

பொறுமையின் எல்லை கண்டு
பொதிகளை நிதம் சுமந்து
வறுமையில் வாடி நாளும்
வன்மையாய் உழைக்கும் சின்னம்

பார் விரும்பும் அதன் சகுனம்
பழங்குப்பை அதன் உணவு
ஊர் முழுதும் உதைத்திட்டாலும்
ஊமையாய் கடமை யாற்றும்

குட்டியில் மிக அழகு
குணத்திலும் பேரழகு
பட்டி முதல் உலகெங்கும்
பரிமளிக்கும் மக்கள் நண்பன்

இத்தனை நற்குணமும் சேர்ந்த
எழில் தொண்டன் யாரென்று
சுத்தமாய் இனும் தெரியலையோ
சொல்லுகிறேன் கழுதையே தான்

திட்டுதற்கு அதன் பெயரை
தீவிரமாய்ப் பயன்படுத்தி
மட்டின்றி (பேசுவோர்) பேசட்டுமே
மனதிற்குள் துயரம் வேண்டா



# நெறியான வாழ்வு காண்பீர்!

செய்திடும் செயல்களாலே
　　செம்மையும் சிறுமையாவும்
எய்திடும் எக்காலத்தும்
　　என்பதை அகத்திற்கொண்டு
செய்குவீர் நல்லசெய்கை
　　ஜெகமது உள்ளமட்டும்
எய்துவீர் நற் புகழும்
　　என்றுமே நிலைத்துநிற்க

தந்தை தாய் சுற்றமெலாம்
　　தாயகத்தின் அங்கமேதான்
சுந்தர நாடு மேலோங்க
　　சுயநலம் அழிந்துபோக
தந்திரம் கயமை நீங்க
　　தான் எனும் தெம்பொழிய
சொந்தமாய் உலகைக்கொள்க
　　சுகமதும் அதற்கீடில்லை

இருப்பதையும் அழிவதையும்
　　இவ்வுலக வாழ்வதையும்
கருப்பொருள் உணர்வினையும்
　　கடமையின் பொறுப்பினையும்
திருப்பமொடு திசைகளையும்
　　திண்ணமாய் மனதிற்கொண்டு
நெருப்பினில் கரிவதன்முன்
　　நெறியான வாழ்வுகாண்பீர்.

# ஏனோ பிறரைப் பழிக்கின்றோம்?

பண ஆசைப் பேய்பிடித்தால்
பந்த பாசம் மறக்கவைக்கும்
குணமதும் மாறிப் போகும்
குறைவான சொற்கள்வரும்
கணத்தினில் சினம் உண்டாகும்
கண்களில் சிகப்பு மேறும்
பிணத்தது தன்மையாவார்
பிறருக்குப் பகையுமாவார்

பெண்ணாசைப் பேய் பிடித்தால்
பெருங் குலப் பெருமையையும்
எண்ணாமல் உடன் மறப்பார்
எண்ணம்போல் வழி நடப்பார்
கண்ணாகக் காத்து வந்த
கடமையையும் மறந்திடுவார்
உண்ணாமல் உறக்கம் கெட
உயிரினையும் ஈடுவைப்பார்

மண்ணாசைப் பேய் பிடித்தால்
மனந்தனில் வெறியே ஏறி
எண்ணாமல் கொடுமை தினம்
எத்தனையும் துணிந்து செய்வார்
திண்ணமுடன் பிறர் மனையை
திருடியும் உடன் சேர்ப்பார்
விண்முட்ட சேர்த்தும் கூட
வேண்டுமென்று வெறியே கொள்வார்

முழுஞானி என்றுரைப்போர்
　　மூவாசைக் களைந்தனரோ
பழுதிலேன் எனப் புகல்வோர்
　　பார் நடப்பு உணர்ந்தனரோ
எழு பிறவிப் பேசிடுவோர்
　　இறைவனடி உணர்ந்தனரோ?
வழுவில்லா ஞானி என்போர்
　　வகை மூன்றில் எதைக்களைந்தார்?

நல்லார் எவரும் இங்கில்லை
　　நன்கு உணர்ந்தோர் இலை இல்லை
பொல்லார் எவரும் இங்கில்லை
　　பொறுப்பற்றோரும் இலை இல்லை
கல்லார் எவரும் இங்கில்லை
　　முழுமையும் கற்றோர் யாருமிலை
எல்லோர் மனமும் பலவிதமே
　　ஏனோ பிறரைப் பழிக்கின்றோம்.



# எதில் இல்லை மது?

கள்ளில் மது உண்டென்பார்
கனியில் மது உண்டென்பார்
எள்ளி நகையாடிடுவார்
எளியோன் குடி பார்த்தவுடன்

மதுவில்லாத இடம் ஏது
மறந்து நகைக்கும் மானிடரே
அதுவும் உமக்கே தெரியாதேன்
அடியேன் ஒருசில அறைகின்றேன்

மங்கை விழிகளில் மதுவுண்டு
மழலை மொழியினில் மதுவுண்டு
தங்கம் வைரத்தில் மதுவுண்டு
தனது சொத்தில் மதுவுண்டு

இசையின் இனிமையில் மதுவுண்டு
இன்தமிழ் மொழியில் மதுவுண்டு
வசையில் உரையில் மதுவுண்டு
வண்ண நிறங்களில் மதுவுண்டு

அந்தி வானில் மதுவுண்டு
அழகு நிலவில் மதுவுண்டு
சந்திரன் குறையினும் மதுவுண்டு
சாதி உணர்வில் மதுவுண்டு

நட்பின் உயர்வில் மதுவுண்டு
நல்லோர் சேர்க்கையில் மதுவுண்டு
புட்கள் குரல்களில் மதுவுண்டு
புதுமை பலதில் மதுவுண்டு

சோலை எழிலில் மதுவுண்டு
சுந்தர மலர்களில் மதுவுண்டு
காலைக் கதிரோன் ஒளியதனை
கன்னியோடொப்பில் மதுவுண்டு

தேயிலைக் காப்பியில் மதுவுண்டு
தேனிலும் பாலிலும் மதுவுண்டு
தாயின் பாலிலும் மதுவுண்டு
தந்தை பரிவிலும் மதுவுண்டு

கல்லிலும் கூட மதுவுண்டு
கலைகளிலெல்லாம் மதுவுண்டு
இல்லற வாழ்விலும் மதுவுண்டு
இணையில் துறவிலும் மதுவுண்டு

கவிதை கற்பதில் மதுவுண்டு
கலைஞன் படைப்பில் மதுவுண்டு
புவியில் மதுவிலா இடம் இல்லை
புரிந்து கொண்டால் போதுமய்யா!

உண்ணும் உணவில் மதுவுண்டு
உறங்கும் சொகுசில் மதுவுண்டு
எண்ணில் எதிலும் மதுவுண்டு
எங்கும் மதுவே வேறில்லை.



# புவனம் வாழ நாமும் வாழ்வோம்!

நம்மை நாமே ஆள வேண்டும்
நலியும் ஏழையும் வாழ வேண்டும்
அம்மையப்பன் வடிவு கொண்ட
அகிலத் துள்ளே பேத மேனோ?

செல்வர் எல்லாம் திருந்த வேண்டும்
செம்மை வழியைக் காணவேண்டும்
தில்லுமுல்லுகள் ஒழிய வேண்டும்
தீமைகள் எல்லாம் அழியவேண்டும்

இருக்கும் •நாளும் கொஞ்ச நாளாம்
இடையில் ஏனோ ஏற்ற தாழ்வு?
பெருக்கும் மட்டும் அறத்தைப் பெருக்கி
பெரிய வாழ்வு வாழ வேண்டும்

கொடுப்பதெல்லாம் கொடையுமல்ல
கொண்டு வந்ததெதுவுமில்லை
எடுப்பதும் தருவதும் எல்லாம் வல்ல
இறையருள் செயலே உணராயோ

சுடுகாட்டில் நாம் கற்கும் பாடம்
சுத்தம் மிகு பாடமாகும்
வடுவில்லா நல் வாழ்வு வாழ்ந்திட
வன்மை தரும் கருத்துமாகும்

உணர்ந்து நன்கு வாழ்வோம் நாமே
உயிர் இருக்கும் வரையே வாழ்வு
புணர்ந்து வாழ்வோம் புதுமை கண்டு
புவனம் வாழ நாமும் வாழ்வோம்



# வழிகாட்டப் படி!

தினமும் படித்திடுவாய் தம்பி — நீ
தீவிரம் காட்டிடுவாய் கல்வியில் தம்பி —(தினமும்)

படிக்காத நாளெல்லாம் பாழான நாளே — படிப்பை
பண்பாகக் கொண்டே பழகிவிடு தம்பி
மடிக்காதே சற்றேனும் மனம் தளராதே — உனக்கு
மங்காத ஒளிகாட்டும் சக்தியும் அதுவே —(தினமும்)

சென்றதை நிகழ்வதைப் படித்தே நீயும் — உலகம்
செலவேண்டும் பாதையை உணர்த்தவே கற்பாய்
நின்றதை நிற்பதை நினைவினில் கொண்டே — உலகு
நீடித்து வாழவே வழிகாட்ட கற்பாய் —(தினமும்)



# எல்லாம் இரண்டு

சக்தி சிவமென இரண்டு
சாதியும் உலகில் இரண்டு
முக்தி வாழ்வென இரண்டு
முதலும் முடிவென இரண்டு

உள்ளம் உடலென இரண்டு
உறவு பகையென இரண்டு
பள்ளம் மேடென இரண்டு
பகல் இரவென இரண்டு

நன்மை தீமையென இரண்டு
நரகம் சொர்க்கமென இரண்டு
இன்மை செல்வமென இரண்டு
இறப்பு பிறப்பென இரண்டு

அகம் புறமென இரண்டு
ஆதவன் நிலவென இரண்டு
சுகம் துக்கமென இரண்டு
சுயம் நகலென இரண்டு

தந்தை தாயென இரண்டு
தன்னலம் பொதுநலம் இரண்டு
சிந்தையும் உணரில் இரண்டு
சிரிப்பு அழுகையென இரண்டு

எண்ணிப் பார்க்கில் உலகில்
எதுவும் இரண்டில் இயங்கும்
விண்ணும் மண்ணும் எல்கையில்
விளக்கம் மேலும் தேவையோ?



# இராமலிங்கர் வழி நடப்போம்

கடலினிலே அலைகள் பலவென்றாலும்
கடுகளவும் அதனுள் பிளவு உண்டாமோ?
உடலினிலே அங்கம் பல வென்றாலும்
உயிரளவும் அதனுள் பிரிவு வந்திடுமோ?
கடவுளுக்குப் பெயர்கள் பலவென்றாலும்
கருணை ஒளி ஒன்றென நீ அறிந்திடுவாய்
தடம்புரளும் மனமே உன் தன்மையினை
தானாக மாற்றி நிதம் தனை உணர்வாய்

உலகினிலே மக்கட் குலம் ஒத்து வாழ
ஒரு வழியைக் கண்டு நம் இராமலிங்கர்
அலகினிலே அன்பு வாழ அனுதினமும்
அகம் குழைய அவனடியை வேண்டினாரே
பலகற்றோம் என்றே நாம் திரிய வேண்டா
பண்புடனே மனித குலம் வாழ வேண்டிற்
நிலவினைப்போல் உலகினை நாம் நமதாய் எண்ணி
நின்று வாழும் இராமலிங்கர் வழி நடப்போம்.



# ஏனோ அழுகின்றோம்?

கண்கள் இன்னும் உறங்கவில்லை
கருத்தில் குழப்பம் வந்ததினால்
உண்ணும் உணவும் ருசிக்கவில்லை
உணர்வில் மயக்கம் வந்ததினால்

பாசம் என்ற பெரு நோயும்
பாதை வழியே இழுப்பதனால்
நாசம் என்ற கடலுள் நான்
நாளும் நடந்தே செல்கின்றேன்

ஆசை என்னும் அரக்கர்களும்
ஆரத் தழுவி கொண்டதினால்
வேசை மனதைக் கொண்டே நான்
வேரொடு சாய்ந்து வீழ்கின்றேன்

வீணாய் மனதைத் தினங்குழப்பி
வேதனை பலவும் பெறுகின்றேன்
காணாப் பொருளுக் காசைகொண்டு
கவலை ஏற்று மடிகின்றேன்

எல்லாம் அவனே என்றெண்ணி
எதுவும் நம்மில் இல்லையென
நல்லான் வழியில் நாம் நடந்தால்
நம்மில் கவலை உண்டோ சொல்?

வருவதும் போவதும் அவன் செயலே
வருந்தில் ஏதும் பயனுண்டோ
தருவதும் எடுப்பதும் அவனன்றோ
தானே ஏனோ அழுகின்றோம்?



# பகவானே என்றழைப்பர்

ஒளியினைக் கனியென்றெண்ணி
உயிர்விடும் விட்டிலைப் போல்
வெளியினை நீரென்றெண்ணி
வெறிகொளும் மானினைப் போல்
குழியினைக் காடென்றெண்ணி
குதித்திடும் கரியினைப் போல்
தெளிவிலா மனித ரெல்லாம்
திசை கெட்டு அழிகின்றரே

இலவினை உண்ண வேண்டி
இருந்திடும் பறவையைப் போல்
பலவினை புரிந்துலகில்
பணம் பணம் என்றலைந்து
நிலமிதில் நாட் கடத்தி
நீதியிலா செயல் புரிந்து
பலமற்று உடல் வீழின்
பகவானே என்றழைப்பர்.



# பருகிடுவாய் அவன் அருளை

கனியினில் சுவையைப் போலும்
கரும்பினில் ரசத்தைப் போலும்
பனியினில் மென்மை போலும்
பாலினுள் வெண்ணை போலும்
வனிதையுள் கற்பைப் போலும்
வைரத்துள் ஒளியைப் போலும்
புனிதனும் இறைவன் தானும்
•பொலிவுடன் மிளிருகின்றான்.

கோடையில் குளிர் தருவான்
குளிரினில் இதம் தருவான்
மேடையில் புகழ் தருவான்
மென்மையில் அருள் தருவான்
ஆடையில் நூல் ஆவான்
அகம் தனில் நடம்புரிவான்
பாடையில் போகும் முன்னே
பருகிடுவாய் அவன் அருளை!

அருள் வேண்டு மென்றாலும்
அகம் விரிய வேண்டுமடி
பொருள் வேண்டு மென்றாலும்
புத்தி தெளிய வேண்டுமடி.
வெருள் ஒழிய வேண்டுமடி
வெறி அகல வேண்டுமடி
மருள் நீங்க வேண்டுமடி
மதம் ஒழிய வேண்டுமடி.

# எல்லாம் ஒன்றே

அரியும் சிவனும் ஒன்றன்றோ
ஆணும் பெண்ணும் ஒன்றன்றோ
கரியும் நரியும் ஒன்றன்றோ
கடலும் அலையும் ஒன்றன்றோ

மண்ணும் விண்ணும் ஒன்றன்றோ
மக்கள் குலமே ஒன்றன்றோ
எண்ணும் எழுத்தும் ஒன்றன்றோ
எழிலும் குறையும் ஒன்றன்றோ

பிறப்பும் இறப்பும் ஒன்றன்றோ
பிள்ளையும் தாயும் ஒன்றன்றோ
கறுப்பும் சிகப்பும் ஒன்றன்றோ
காயும் கனியும் ஒன்றன்றோ

புறமும் அகமும் ஒன்றன்றோ
புலமையும் மூடமும் ஒன்றன்றோ
அறமும் மறமும் ஒன்றன்றோ
ஆக்கலும் அழித்தலும் ஒன்றன்றோ

இன்பமும் துன்பமும் ஒன்றன்றோ
இரக்கமும் சினமும் ஒன்றன்றோ
தன்னலம் பொதுநலம் ஒன்றன்றோ
தலைவனும் தொண்டனும் ஒன்றன்றோ!

ஏற்றமும் இறக்கமும் ஒன்றன்றோ
எதிரியும் நண்பனும் ஒன்றன்றோ
தோற்றமும் மறைவும் ஒன்றன்றோ
தொகுப்பதும் சிதைப்பதும் ஒன்றன்றோ

பறவையும் மிருகமும் ஒன்றன்றோ
பாவம், புண்ணியம் ஒன்றன்றோ
உறவதும் பிறவதும் ஒன்றன்றோ
உலகம் யாவும் ஒன்றன்றோ!

# நலங்கள் பெருக்கிட வா!

துன்பமில்லாத உலகே வா - வா
துயரமில்லாத நிலையே வா - வா

அன்பு மிளிரும் ஒளியே வா - வா
அகத்தின் நிறைவே அருகில் வா - வா
இன்பம் நிறைந்த எழிலே வா - வா
இன்னல் இல்லா இயல்பே வா - வா

வாழ வைக்கும் தொழிலே வா - வா
வான்ம் கொட்டும் மழையே வா - வா
சூழ எங்கும் அறமே வா - வா
சுந்தர சக்தியே விரைவாய் வா - வா

சாதி ஒழியும் நிலையே வா - வா
சண்டை அழிக்கும் அருளே வா - வா
வாதி பிரதியாம் நிலை ஒழிய வா
வல்லமை கொண்ட மெய்யே வா - வா

ஆதி அந்தம் அறிந்தாய் வா - வா
அருளும் இறைவா அருகே வா - வா
நாதி அற்றே நடுங்கும் உலகினுள்
நலங்கள் பெருக்கிட வா - வா - வா!



# கற்பனையாம்

சரியென்றும் தவறென்றும் எதுவுமில்லை
சாதனைகள் என்பதுவும் எதுவுமில்லை
சிரி தம்பி சித்தித்தே நன்கு சிரி — உன்
சிந்தையில் ஒளி பரவும் நீ உணர்வாய்

மாருதது இவ்வுலகம் கணம் கணமும்
மாறிக் குமைவதுவும் மனிதமனம் (அதில்)
ஏருதது உண்மையதும் ஒன்றேயாம் — நாளும்
ஏறுவதும் ஆசையதும் ஒன்றேயாம்

சோதனைகள் என்பதுவும் உன் அகத்தே
சூழ் நிலையில் சோதனைகள் எதுவுமில்லை
வேதனைகள் என்பதுவும் உன் குழந்தை - வெளியே
வேறுபாடு என்பதுவும் கற்பனையாம்.



# ஜெகத்தை மாற்றினரோ?

காலம் கெட்டுப் போச்சுதடா தம்பி தம்பி
கருணையற்றுப் போச்சுதடா தம்பி தம்பி
ஞாலம் ஒட்டி சேருதடா எனினும் தம்பி
நற் செயல்கள் குறையுதடா தம்பி தம்பி

சாதி ஒழிக்க வேண்டியவர் தம்பி தம்பி
சாதி வளர உதவுறுங்க தம்பி தம்பி
பாதி திட்டம் நடக்குதடா தம்பி தம்பி
பகற் கொள்ளை மலியுதடா தம்பி தம்பி

இந்திர லோகம் பார்க்கிறுங்க தம்பி தம்பி
இதய லோகம் பார்க்கலேயே தம்பி தம்பி
சந்திர லோகம் பார்க்கிறுங்க தம்பி தம்பி
சன்மார்க்கம் பார்க்கலேயே தம்பி தம்பி

அறிவு நிதம் வளருதுன்னு தம்பி தம்பி
அண்டமெலாம் முழங்குதடா தம்பி தம்பி
அறிவு எனில் எதுவெனவே அறியார் அது
அகவளர்ச்சி; உணரலேயே! தம்பி தம்பி

புத்தர் காந்தி போன்றோர்கள் இவ்வுலகில்
பிறந்தும் பலன் என்ன கண்டார் சொல்லு தம்பி
செத்து மடிந்து மறைந்ததல்லால் தம்பி தம்பி
ஜெகத்தை சற்றும் மாற்றினரோ தம்பி தம்பி!



# ஆறறிவு பெற்ற பயன் காட்டிடுவீர்!

போர் என்ற சொல்லதுவும் ஒழியாதோ
பொருமைகள் அழிந்தொழிந்து மாயாதோ
ஏர் முனையே பெரிதென்று எண்ணுரோ
ஏழைகளின் துயர் தீர்க்க நினையாரோ

பார் முழுதும் ஓர் குலமாய் உணராரோ
பகலவனும் தினம் உணர்த்தும்; குருடர்களோ!
வேர் அதுவும் இறைவனிடம் தானிருக்கு
வீணர்களும் இவ்வுண்மை அறியாரோ!

தான் எனும் அகங்காரம் ஒழியாதோ
தலைக்கனத்தில் பிற நாட்டை அடிமை கொள
வான் வழியும் குண்டுகளைப் பொழிவோரே
வாழ் நாளில் நற்கருமம் புரியீரோ!

பிறர் அழிய ஆயுதங்கள் பொழிவோரே
பேதமுண்டோ உம் உயிர்க்கும் பிற உயிர்க்கும்
அறம் அறிக உம்முடைய ஆயுளையும்
அரைக்கணமும் நிறுத்திவைக்க முடிந்திடுமோ!

மனித குலம் வாழ்வதற்கே உம்திறத்தை
மனம் விரியப் பயன்படுத்தி உயர்ந்திடுவீர்!
புனிதப்பணி ஆக்கப்பணி உணர்ந்திடுவீர்
புதைகுழிக்குச் செலுமுன்னே பயன்படுவீர்!

வெற்றி கொண்டு போர்முரசு கொட்டவேண்டா
வேதனைகள் உலகிடையே வளர்க்கவேண்டா
நெறிகண்டு உலகு வாழ வாழ்ந்திடுவீர்
நிலையற்ற வாழ்வினையும் உயர்த்திடுவீர்

ஒழிக போர் ஒழிகவென்று முழங்கிடுவீர்!
ஒற்றுமையே வாழ்கவென்று செயல்படுவீர்
அழிக வெறி அழிகவென்று நிமிர்ந்தெழுவீர்
ஆறறிவு பெற்றபயன் காட்டிடுவீர்!

# புலம்புவதைக் கேளாயோ?

(நேருஜி மறைந்த அன்று எழுதியது)

மோதிலால் பெற்றெடுத்த முடிசூடா மன்னவனே
வீதியெலாம் விடுதலைக்குக் குரல்கொடுத்த ஆதவனே
சாதியற்ற பாரதத்தை உருவாக்க உழைத்தவனே
நீதியதன் இருப்பிடமே நேருஜியே ஏன் மறைந்தாய்?

இந்தியாவின் தலைமகனே இதயத்தின் ஒளிவிளக்கே
அந்தரத்தில் விட்டாயே யாரினிமேல் எங்களுக்கே
மந்திரியாய் மாதாவாய் மக்கள் வாழ தொண்டாற்றி
உந்திருவை அழித்தாயே உலகினிமேல் என் செய்யும்?

பாரதத்து மக்களை நீ பதறவைத்து மறைந்திட்டாய்
தாரகத்து நார்போன்று தரணியினைச் சேர்த்தவனே!
நீரகத்து முத்தே ஓர் நேர்மையதன் இருப்பிடமே
பாரகத்து உயிர்களெலாம் பதறுவதைக் காணுயோ!

புத்தர்பிரான் காந்திமகான் இயேசுவழி சென்ருய் நீ
இத்தலத்தில் சொற்கமதை ஏற்படுத்த விளைந்தாய் நீ
உத்தமனே உலகொளியே உம்பரெலாம் உனைக்காண
ஒத்துழைத்து அழைத்தனரோ உலகமதை மறந்தனரோ!

கண்ணிழந்து மக்களெலாம் கானகத்து தவிப்பதுபோல்
விண்ணிழந்து ஆதவனும் மண்வீழ்ந்து துடிப்பதுபோல்
தண்ணிழந்து சந்திரனும் தலைகவிழ்ந்து ஏங்குதல்போல்
புண்பட்டே இவ்வுலகம் புலம்புவதைக் கேளாயோ!



# என்று காண்போம்!

(இலக்கியக் கடல், இணையற்ற வீரன், பொதுவுடை சிற்பி ஜீவா அவர்களின் மறைவு அன்று பிறந்த பாடல்)

விண் நின்று உலகை எலாம்
விளங்க வைக்கும் ஆதவனும்
மண் மறந்து மறைந்து விடில்
மானிலமும் வாழ்ந்திடுமோ

கண்ணெனவே உயிரெனவே
கன்னித் தமிழ் நாட்டினையும்
எண்ணிய எம் ஜீவாவே
எங்கே நீ மறைந்திட்டாய்

எண்ணமின்றி இரக்கமின்றி
இயமன் உன்னைக் கொண்டாலும்
எண்ணமதில் அறமே கொண்ட
எழில் வீரா நீயேன் சென்றாய்

ஏழை மக்கள் இதய நண்பர்
ஏங்கி ஏங்கி அழும்போது
ஊழை வெல்ல திறமின்றி
உயர நீ பறந்தனையோ

ஜீவா நீ இறக்கவில்லை
ஜீவன் பல பிரிந்ததுண்மை
நாவலே உரைக்கப் போமோ
நல்லோய் உன் பிரிவதனை

அண்ணா நீ மறையவில்லை
அமரகவி தான் மறைந்தான்
கண்ணைக் காத்து வந்த
கம்பனும் தான் மறைந்தானே!

வாடி வதங்கும் தொழிலாளர்
வாட்டமதைப் போக்க நீயும்
பாடி முழங்கிய கவிதைகளும்
பண்மறந்து புலம்புதயோ!

காந்தி பாரதி கம்பன் வ-உ-சி
காண் விழைந்தழைத்தனரோ
சாந்தி அங்கும் இல்லையென்றே
சாவை விட்டுனை கொண்டனரோ

ஆற்றலின் பிறப்பிடமே ஜீவா
அறிவுலக ஒளிவிளக்கே ஜீவா
தேற்றுவார் யாரே சொல் எம்மை
திகைக்கின்றார் மக்களுமே பாராய்

கடல்மடை திறந்தாற் போன்று
கடமையை உணர்த்த வேண்டி
திடல்களில் முழக்கமிட்டாய்
தீரனே என்று காண்போம்

கூற்றுவன் கொள்ளும் போது
குணம் காண மறந்திட்டானே
நாற்றிசையும் நல்லோரெல்லாம்
நலிவதையும் மறந்திட்டானே

பொது நலத்தைத் தன்னலமாய்
        பொருள் கொண்ட மாமேதாய்
புதுமலராய் நீ மறைந்தாய்
        பொன் மறைந்தாற் போல் மறைந்தாய்

கவியானாய் கலையானாய்
        கருமத்தின் உருவானாய்
புவியானாய் பொழுதானாய்
        புவி உள்ளச் சிலையானாய்

உம்பர் வாழ் உலகத்துள்ளே
        உலவி நீ நடந்தாலும்
அம்பெரும் இவ்வுலகுள்
        உன் ஆவி சுழன்றிடுமே!



# அவர் கொள்கை உணரலையே!

மக்கள் குலம் மாண்புடனே வாழ்வதற்கே
மானிலத்தில் அவதரித்தார் இயேசு மகான்
அக்கால மக்கள் பலர் அவர் பெருமை
அறியாமல் சிலுவைதனில் அறைந்தார் மூடர்

புத்தர் காந்தி போன்றோரும் அவர் வழியை
பூதலத்தில் கடைபிடித்து ஒழுகி நின்றார்
எத்தனை பேர் வந்தாலும் இவ்வுலகம்
என்றுமே உணராதோ இறை ஒளியே

சத்தியத்தில் சன்மார்க்கம் உணர்த்தி நின்ற
சமரசராம் வள்ளலாரும் இவ்வுலகை
நித்தியத்தில் ஆழ்த்திவிட முயன்றாரய்யா
நீள் உலகும் அவர் கொள்கை உணரலையே.



# பொங்குவீர்!

ஏழை என்றொரு இனம் இன்னமும்
இருக்க வேண்டுமோ என் தோழா
கோழை என்றொரு குழு இன்னமும்
கூட வேண்டுமோ என் தோழா

ஏழை என்பவன் கோழையானதால்
இன்னமும் அவன் ஏழையல்லவோ?
ஊழை நம்பியே உறங்குவததனுல்
உண்மை மறந்தான் என் தோழா

நாட்டில் ஏழை பெருகியிருந்தும்
நல்ல வாழ்விற் குழைக்க மறந்து
வீட்டில் சுருண்டு தூங்கி அழுது
வீணே கழிக்கின்ருர் வாழ்நாளை

இத்தகு கோழைகள் இருப்பதுவரைக்கும்
ஏழைக்குழுவும் இருந்தே தீரும்
எத்தரும் அவரை தினம் ஏமாற்றி
எழிலான் வாழ்வு வாழ்ந்தே தீரும்

கொள்ளையடிப்பவன் குபேரனுகியே
குழுவில் பெரியவன் பட்டம் பெறுகிருன்
வெள்ளை யுள்ளத்தான் வீணரைப் பார்த்தும்
விதியை நம்பியே வீணில் நலிகிருன்

உணர்ச்சி இல்லையா? உதிரம் இல்லையா?
ஊக்கமில்லையா? உழலும் ஏழைகள்
உணர்ச்சி பொங்கவே ஒன்று சேருவீர்
உலுத்தர் கூட்டத்தை ஒழிக்க பொங்குவீர்



# போலிகள்

ஆணும் பெண்ணும் அகமொத்து
ஆண்டவனருளும் உடனுகி
பேணி வளரும் ஓர் உயிரும்
பிறக்கும் மாயம் தனை உணர்ந்து
ஆணித்தரமாய் பறை சாற்ற
அறிஞர் எவரும் உண்டோ சொல்
காணும் காட்சி தனையல்லால்
கருவை உணர்ந்தோர் யாரோ சொல்

இலக்கியம் பல பேசிடுவர்
இன்மொழிகள் தினம் புகல்வார்
குலப் பெருமை கூறிடுவர்
குணமே செல்வம் என்றிடுவார்
இலக்கணத்தின் நயம் உரைப்பார்
இறைப் பெருமை சாற்றிடுவார்
வலக்கரத்தை உயர்த்தி நமை
வகையாய் ஆசியும் கூறிடுவார்

வள்ளுவனை எடுத்துரைப்பார்
வர்ணனைகள் பல புகல்வார்
தெள்ளு தமிழ்ச் சிலம்பினையும்
தெளிவாய் எடுத் தியம்பிடுவார்
உள்ளத் தெளிவு வேண்டுமென்பர்
உயரப் பறக்க வேண்டுமென்பர்
பள்ளம் மேடு தெரியுமென
பறை அறைந்து முழங்கிடுவார்

வேதம் நான்கும் படித்தவர்போல்
வீறுப்புடன் அலசிப் பேசி
நாதம் சரம் யோகமெலாம்
நன்கு கண்டேன் என்றிடுவர்
பூதம் ஐந்தும் தான் அடக்கி
பூலோகத்தை வலம் வந்து
சாதங்கள் புரிவே னென
சாடிச் சாடி கத்திடுவார்

பிறரை மூடர் எனப் புகல்வார்
பீதி மூட்டி பணம் பறிப்பர்
அறத்தின் வழியினை அளந்திடுவார்
அவரே அதனை மறந்திடுவார்
திறத்தைத் தாஞய் விளம்பிடுவார்
தீரன் நானே என்றிடுவார்
புறத்தின் த்ன்மையே நன்கறியார்
புனித ஒளியை அறிவாரோ?

பண்டைப் பெருமை தினம் கூறி
பணத்தைச் சேர்ப்பதல்லால் ஓர்
வண்டமிழ் இலக்கியப் புதுப் படைப்பை
வகையாய்ச் செய்தோர் மிகச் சிலரே
பண்டைக் காப்பியம் ஐந்தின் பின்
பைந்தமிழ்க் காப்பியம் ஆருச்சோ
கண்டாயோ என் தமிழ் மகனே
கன்னித் தமிழின் வளர்ச்சிதனை?



# அரசாங்க ஊழியரில் போலிகள்

புத்தகம் தன்னை உருப்போட்டு
புத்திக் குழம்பப் படித்துவிட்டு
இத்தரை மீதில் பட்டம் பெற்று
இங்குமங்கும் தினம் நடந்து
உத்தமர் என்றே சான்றுகாட்டி
உருப்படியாய் ஓர் வேலைதனில்
பத்திரமாக அமர்ந்ததன் பின்
பட்ட பாடுகள் மறப்பார் சிலர்

பதவி என்ற இருக்கைகளில்
பாங்குடன் அமர்ந்த பின் அவரும்
உதவி வேண்டி வருபவரை
உதறித் தள்ளி நாட்களிப்பர்
நிதமும் தூக்கம் இருக்கைகளில்
நீண்ட குறட்டை அவரிடத்தில்
விதவிதமான ஆடை அணி
வீருப்பான நடை வேறு

உலகின் நிலையை உணர்வதில்லை
உண்மையில் கடமை நினைப்பதில்லை
பலவும் பேசி நாட்களிப்பர்
பதவி நிலைக்க மேலோரின்
மலமும் சுமக்க விரைந்திடுவார்
மக்களைக் காணில் குரைத்திடுவார்
நிலமும் சுமக்குது இவர்களையும்
நீசர்கள் இவரும் மனிதர்களோ!

'மக்கள் ஊழியர் நாம் என்னும்—
　　மகத்தான் மெய்யை மறந்து இவர்
குக்கலாய் எரிந்து வீழ்ந்திடுவார்
　　குறியினைப் பணத்தில் பதித்திடுவார்
பக்கமாய் இருக்கும் ஊழியரை
　　பலவும் வைது மனம் மகிழ்வார்
சிக்கல் எதுவென அறியீரோ?
　　செயலின் வழியை அவர் அறியார்!

எங்கோ வானில் பிறந்தவர்போல்
　　எதையோ முழங்கிக் கடன் கழிப்பர்
'தங்குபடி'யினை எதிர்பார்த்தே
　　தாளமிடுவர் மேசை தனில்
பங்கும் வைப்பர் கிடைத்தவற்றை
　　பாவம் பழிக்கு அஞ்சுபவர்
அங்கும் உண்டே, அவர் வெறுத்தால்
　　அந்தோ அவரை ஒழித்திடுவார்!

தன்னுடை இடத்தை மறந்திடுவார்
　　தன்னுடை கடமை தள்ளிடுவர்
பன்முறை தவறுகள் செய்தாலும்
　　பக்குவமாகப் பிறர் மீது
நன்கு சுமத்தி நழுவிடுவார்
　　நல்லோர் அவரின் துயர் நினையார்
இந்நிலம் தாங்கி தவிக்குதையோ
　　இவர்களால் நாடும் வாழ்ந்திடுமோ?

நாட்டினைக் கெடுப்போர் இவரன்றே
நல்லோரைப் பழிப்போர் இவரன்றோ
காட்டியும் கொடுப்போர் இவரன்றோ
கல் நெஞ்சர் இவர்போல் வேறுண்டோ
ஈட்டியும் இவர் மனம் துளைத்திடுமோ
எதிரியும் இவரன்றி வேறுமோ?
நாட்டினில் வாழும் நல் மக்காள்
நரிகளை வாழ விடல் முறையோ?

ஒவ்வொரு இடத்திலும் இவர் போன்று
ஒரு சிலர் இருந்து தயங்காமல்
ஒவ்வொரு இடத்திலும் நல்லோரை
ஒழிக்கவும் திட்டம் இடுகின்றார்
எவ்வழி முயன்றும் இக்குழுவை
எதிர்த்து அழிக்க தவறி விடில்
அவ்விடம் உழைக்கும் நல்லோரும்
அணுவணுவாக மாறிடுவார்!

போலி அரசாங்க ஊழியரை நாம்
பொறுக்கி எடுத்து பொசுக்கிடுவோம்
வாலியை இராமன் அழித்தாற் போல்
வழியாய்ச் சென்று அழித்திடுவோம்
வேலியை அழிக்கும் எதிரி இவர்
வேதனை வளர்க்கும் துரோகி இவர்
கூலியைப் பெற்று அறம் அழிக்கும்
கொள்கையில் இவரும் மனிதர்களோ?



# குழந்தையும் தெய்வமும்

வாடும் குழவியை நாளும் கண்டும்
வற்றிய வயிறினை நேரில் கண்டும்
சூடும் இரக்கமும் சிறிதும் இன்றி
சொர்க்க போகம் மனதில் எண்ணி
வீடுபேறு அடைய விரும்பி
வீட்டிலுள்ள பாலைக் கொண்டு
நாடும் கடவுளை உள்ளில் உள்ளி
நாடாக் கல்லில் கொட்டுதல் முறையோ

குழந்தையும் தெய்வமும் ஒன்றென எண்ணில்
குமுறும் குழவியை கண்டதன் பின்பும்
பழமும் பாலும் அதற்குத் தராமல்
பகவான் வடிவாம் பசலையை மறந்தே
அழகொடு செதுக்கிய சிலையின் மீது
அள்ளி விட்டு அழுது விழுந்து
கழபம் கஸ்தூரி மஞ்சள் சாத்தி
கண்ணீர் விடுவதில் கருத்துமுண்டோ

இந்துமத எதிரி நான் அல்ல
இதயத்தில் பக்தியில் துரோகியல்ல
பந்தமுண்டு மதத்திலும் பக்தியுண்டு
பழமையில் பற்றுண்டு என்றாலும்
சுந்தரக் குழவியின் துயரைக் கண்டு
சூழ் நிலையை மாற்றிட கூறுகின்றேன்
இந்த முறை மேலும் வேண்டாமப்பா
இன் தமிழ்க் குழவிக்கே ஊட்டிடுவோம்

அந்தநாள் கோயிலுக்கு வழங்கினவை
அத்தனையும் ஏழைக்கு தினம் தினமும்
சொந்தமுடன் அளிக்கின்ற நெறியுமுண்டு
சூழ் நிலையும் அவ்வாறு இருந்ததுண்டு
இந்த நாள் அந்த முறை இல்லையப்பா
ஏய்ப்போர்கள் அங்கேயும் பெருகிவிட்டார்
பந்தமற்று பணம் பறிக்கலாச்சுதப்பா
பகருவதை உணர்ந்து நீ செயல்படுவாய்

பாசமே பக்திநெறி உணர்ந்திடுவீர்
பாரினில் அதற்கு நிகரெதுவுமில்லை
நேசமே ஈசனவன் நெறியுமாகும்
நேர்வழியே அவனுடைய வழியுமாகும்
பூசையால் புண்ணியங்கள் வேண்டுமெனில்
பூவுலக மக்களுக்கே தன்னை ஈந்து
காசு பண ஆசையினைக் களைந்து நீவீர்
கடமையினை அகம் கொண்டு உழைத்திடுவீர்



# எது நாகரீகம்?

நாகரீகம் வந்ததென்று சொல்லுறுங்க — நாளும்
நாணயத்தின் நலிவினையே காணுகின்றோம்
போகங்கள் உயருதென்று சொல்லுறுங்க — பலர்
புழுக்களாக உழல்வதையே காணுகின்றோம்.

உடைத்திட்டோம் அடிமைத்தளை என்கிறுங்க — ஆனா
உள் நாட்டில் வறுமையையே காணுகின்றோம்
தடைகளெல்லாம் தகர்ந்ததென்று சொல்லுறுங்க — சற்
சங்கடங்கள் வளர்வதையே காணுகின்றோம்

விஞ்ஞான ஏற்றத்தையும் புகழுறுங்க — அதனால்
வெறிச் செயல் வளர்வதையே காணுகின்றோம்
அஞ்ஞான மனிதர்களின் ஆசையினால் — உலகை
அழிப்பதுவோ விஞ்ஞான நாகரீகம்!

முன்னேற்றம் பாரென்று சொல்லுறுங்க — ஆனால்
முந்தியிந்த உலகினிலே எவருங்காணு
தன்னலத்தார் ஒரு பக்கம் சுறண்டுறுங்க — இதுவா
தலை நிமிர்ந்து இயம்புகின்ற நாகரீகம்?

உண்மையில் நாகரீகம் எதுவென்றுணரில் — மக்கள்
உவகையுடன் ஒத்துழைத்துயர வேண்டும்
பண்புகள் பல கொண்டு மனிதத் தன்மை — எங்கும்
பரவுவதே பயனுடைய நாகரீகம்

ஒப்பிலா நாகரீகம் எதுவென்றோதில் — உலகம்
ஓர் குடும்பமாமென உணர்தலாகும்
செப்பரிய நாகரீகம் தெரியவேண்டில் — எவரும்
தியாகத்தின் சின்னமாய்த் திகழவேண்டும்.



# சீர்கேடின் சிகிற்சை வேண்டாவோ?

செக்கச் சிவந்த குருதியினை
ஜெகத்தின் வாழ்வுக்கர்ப்பணித்து
ஒக்க துயரினை அணைத்தபடி
உருகும் மனிதர் மகிழ்வாரோ!

கரிந்த குடிலில் வாழ்வினையே
கர்மம் என்று அனுபவித்து
எரிந்த வயிறினை தடவி விடும்
ஏழைகள் வாழ்வும் மலராதோ!

வறுமை நெருப்பில் நெஞ்சினையே
வாட்டி எடுத்தும் பொங்காமல்
பொறுமை காட்டி நடமாடும்
பொற்புடை இனமும் விழிக்காதோ!

வளர்ச்சி வளர்ச்சி என்றபடி
வரட்டுக் கத்தல் கத்திடுவோர்
தளர்ச்சி கண்டு மடிகின்ற
தியாகிகள் இனத்தைப் பாராரே!

ஒட்டத் துணியும் இல்லாமல்
ஒதுங்கும் மக்களைப் பார்த்தபினும்
பட்டு, தங்கம் அணிகின்ற
பகட்டு உருவமும் மனிதர்களோ!

கஞ்சிக்கோலம் இடுகின்ற
கடவுளின் குழந்தையைக் கண்டபினும்
நெஞ்சு முட்ட உண்கின்ற
நீசரும் மனிதர் ஆவாரோ

முடிவில் சாம்பல்; தெரிந்திருந்தும்
முற்றும் சுயநல வெறியினிலே
கடிதில் பணத்தை சேர்ப்பதற்கு
கயமை ஏற்போர் மனிதர்களோ!

பாதை ஓரம் வாழ்கின்ற
பலரை நேரில் கண்டபினும்
போதை ஏறிப் பதவிகளில்
பூரிப்போரும் மனிதரோ சொல்!

வாழ்வுக்காகவே சுதந்திரமாம்
வறட்டுக் கத்தலுக் கல்லேயாம்
தாழ்வு ஒருவர் உற்றிடினும்
தகர்க்கவேண்டும் அமைப்பினையும்!

மனிதர் அறிவில் பலபடியாம்
மற்று எதிலும் பேதமில்லை
மனிதர் எவர்க்கும் வயிறொன்றே
மறக்கலாமோ இவ்வுண்மை!

மறந்தார் பொறுப்பில் இருப்பாரோ
மனிதரும் இருக்க விடுவாரோ
துறப்பார் உயிரும் உடலினையும்
தூக்கி எறிவார் துரோகிகளை

நாளை நாளை எனக்கூறி
நலிந்து நாளும் அழியாரே
காளைக் கூட்டம் பாய்ந்தாற்போல்
கடமை உணர்ந்து பாய்வாரே!

நம்மைக் கெடுப்போர் நம்மவரே
நன்றாய் உணர்வீர் நலிவோரே
செம்மை உறுப்பே என்றாலும்
சீர்கெடின் சிகிற்சை வேண்டாவோ?

# வருங்காலம் எதிர்நோக்கி அமைகின்றாயோ!

குறைகின்றார் அறம் காட்டும் நெஞ்சோர் இன்று
குமைகின்றார் உழவர்களும் தொழிலாளரும்
பறை கொட்டும் பண்பிலாதார் பெருகக் கண்டு
பதைக்கின்றார் அவர் ஓலம் கேளாய் உலகே!

மறம் காட்டும் தோள் வலியும் குறையக் கண்டு
மறைநது வரும் மாவீரர் புலம்புகின்றார்
திறம் கெட்டுத் தீமை பல புரிவோர் கண்டு
திண்மை நாடும் மனிதரெலாம் திகைக்கின்றாரே!

அருளொழுகும் உளமுடைய அறிஞரெலாம்
அனியாய வழிகண்டு பதைக்கின்றாரே
பொருள் தன்னைப் பெரிதென்று அறத்தைக் கொல்லும்
புல்லர்களின் வளர்ச்சி கண்டு பொருமுகின்றார்

நல்லோர் மனத்துயரை இனும் உணராயோ
நானிலத்தை வாழவைக்கும் இறை ஒளியே
வல்லோர்கள் வாடும் நிலை கண்டு நீயும்
வாளாவேன் இருக்கின்றாய் நடுநிதியே

திருந்திடுவார் திருந்திடுவார் என்று நீயும்
திண்ணமாய் நம்பியே இருக்கின்றாயோ
வருந்திடுவோர் மகிழ்ந்திடுவார் உணர்ந்து என்று
வருங்காலம் எதிர்நோக்கி அமைகின்றாயோ!



# உலுத்தர்களை ஒழித்திடவும் அச்சமேனோ!

சிந்திக்கா தேவரையுமே பின்பற்றுதீர்
சிரிக்காத எவரையும் நட்பாக்காதீர்
நிந்திக்கா தேவரிடமும் அன்பு வேண்டா
நிலை நிற்கா செயலெதுவும் செய்ய வேண்டா

பற்றற்ற வாழ்க்கையினை நடத்த எண்ணி
பைத்தியமாய் வீதிகளில் அலைய வேண்டா
பற்றற்றோர் யாருமிலர் துறவிகூட
பரமனிடம் வைத்திருக்கும் பற்றைப் பாரீர்

வாழ்வினையே பெரிதென்று வம்பர்களை
வாழ்த்துகின்ற தாழ்மையினை ஒழித்திடுவீர்
ஊழ்வினைபோற் நடக்குமென துணிந்தீராகில்
உலுத்தர்களை ஒழித்திடவும் அச்சமேனோ?



# ஆண்மை கொண்டு வளர்ந்திடுவாய்

(பாதையோரம் குடியிருக்கும் பாரதநாட்டு மங்கையர்த் திலகம்
ஒருத்தியின் தாலாட்டு)

*பல்லவி*

ஆராரோ ஆராரோ ஆரிரரோ - என்
ஆருயிரே கண்வளராய் - என்

*அனுபல்லவி*

மலரே மணியே மரகதக்கிளியே
மதித்திட முடியா மாணிக்கமே - என்

*சரணங்கள்*

எங்கிருந்தோ இங்கு வந்து
ஏழைக்குடியில் பிறந்தவனே
தங்கத் தொட்டில் இங்கில்லே
தாதிமார்களும் இலே; இல்லே
பட்டுச் சட்டை இல்லேயடா
பவளப் பொம்மை இல்லேயடா
கருவினில் வளர்ந்த ஒளி உருவே
தெருவினில் வந்து பிறந்தவனே - என்

பாதை ஓரம் பிறந்ததினுல்
பாரில் தாழ்ந்தவன் ஆனுயே
பசிக்குப் பாலும் கிடைக்காது
பருக எதுவும் இங்கில்லே
கண்ணேப் பறிக்கும் கார்கள் பல
கண்டு புழுதியும் உண்டிடலாம்
நாயும் மாடும் உந்தனுக்கே
நல்ல நண்பர்கள் ஆவாரே - என்

இந்த நாட்டின் மன்னனென்பார்
இடிகள் உனக்குப் போர் முரசு
மழையும் உனக்குப் பன்னீராம்
மலர்கள் உனக்குத் தெருக்குப்பை
வெயிலும் உனக்கு நிலவொளியாம்
வெற்றியும் உனக்கு எச்சிலிலை
பயிலும் பள்ளி நடுப்பாதை
பள்ளி ஆசான் பகல் திருடன் - என்

படைகள் எடுக்கும் அரசர்கள்
பசியும் பனியும் பிணிகளுமாம்
வானம் உனக்குக் கொட்டாரம்
வழியில் போவோர் மந்திரிகள்
தானம் கிடைப்பது நோய்க்கிருமி
தானே பெறுவது பிறர் ஏச்சு
மன்னு நீயும் மானிலத்தில்
மகிழ்வாய் இருக்கப் போதாதோ - என்

ஈடு இல்லா என் உயிரே
இரக்கமின்றி வளர்ந்திடுவாய்
நாட்டை ஆள்வோர் இங்கு தினம்
நல்ல கார்களில் பறக்கின்றார்
வோட்டு கேட்டு முழங்கிடுவார்
ஒன்பது கோடியும் செலவிடுவர்
நாட்ட மில்லை நம்மீது
நாளும் கண்டு மறந்திடுவர் - என்

உந்தன் துன்பம் தினம் கண்டும்
உணர்வு கெட்டு அலைகின்ற
ஆளுவோரைத் திருத்திடவே
அன்பு மகனே முயன்றிடுவாய்
நீடுகாலம் வாழ்ந்துவரும்
நிலையை மாற்றிட எழுவாயே
உன்னால் மாற்றிட இயலாதேல்
உயிரைக் கொடுத்தும் போராடு - என்

இந்த நிலையை மாற்றிடவோ
இங்கே நீயும் பிறந்தாயோ
நல்ல பிள்ளை நீயானால்
நன்றாய் சொல்வேன் உணர்வாயே
பன்றி வாழ்க்கை வாழாதே
பலரும் இகழ வளராதே
பாதை அருகில் நலிவோரை
பார்த்தும் சும்மா இருக்காதே - என்

பாதையோரக் குடித்தனங்கள்
பறந்து போகும் அன்றோ
நாகரீகம் வரும் நாளாம்
நாடாள்வோருக் குணர்த்திடுவாய்
உயர்ந்தோம் என்று உரைப்போர்கள்
உன்போன்றோரை உணரவில்லை
அயர்ந்து தூங்கும் என் மகனே
ஆண்மை கொண்டு வளர்ந்திடுவாய்! - என்



# செயல்படுவோம்

ஆதியில் இல்லா ஓர் வியாதி - நம்மை
அல்லல் படுத்துவதைக் கண்டாயோ
பாதியில் வந்த இவ்வியாதி - விட்டு
பறந்து போவதும் என்றுளோ

முன்னேற்ற வழியினைத் தடைப்படுத்தும் - நம்
முயற்சிகள் அனைத்தையும் பாழாக்கும்
தன்னல வெறியையும் கிளப்பிவிடும் - வாழ்வினை
தாழ்வு உயர்வெனப் பிரித்துவிடும்

நாட்டைக் கெடுத்து நலியவைக்கும் - நம்மை
நாளும் அடிமை விலங்காக்கும்
சாட்டை அடியினில் விரட்டிடுவோம் - அந்த
சாதி எனும் கொடும் பேயினையே

பேயும் அதற்கு நிகரில்லை - பெரும்
பிசாசும் அதற்கு ஈடில்லை
கோயில் உள்ளும் ஆடிநிற்கும் - இக்
கொடுமையை நாமே ஒழித்திடுவோம்

இனத்தின் ஒற்றுமைக் குலைத்துவிடும் - இதயம்
இரும்பாய் மாற துணை நிற்கும்
மனத்தில் மாசைப் புகுத்திவிடும் - அதன்
மாயை உணர்ந்தால் புரிந்துவிடும்

குழியைத் தோண்டி புதைத்திடுவோம் - அந்தக்
கொடிய சாதிப் பேயினையே
ஒழிக சாதி ஒழிகவென்றே - நாம்
ஒன்றாய்ச் சேர்ந்து செயல்படுவோம்.



# ஒன்றுய்ச் சேருவோம் தோழா!

உழவும் தொழிலும் உலகிற் கடிப்படை
உண்மை கூற்றுதான் என் தோழா
பழமும் பாலும் தினமும் உண்பவர்
பதவியிலிருப்போர் மதித்தனரோ தோழா

மதித்தால் நாட்டில் உழவரும் பிறரும்
மதிப்பின்றி வாழ்வரோ தோழா
மிதித்தே அவரை துன்புறுத்தி சிலர்
மேலாய் வாழ்வரோ என் தோழா

சுதந்திரம் என்பதும் சுபீட்ச மென்பதும்
சுடுகாட்டு வழியா என் தோழா
சிதைந்தே அழியுது அறங்களெல்லாம்
சிந்தித்துப் பாராய் என் தோழா

பாதை வழியினில் பட்டினி கிடக்கிருன்
பகல் முழுவதும் உழைத்த தொழிலாளி
போதை மிஞ்சியே காரில் பறக்கிருன்
புரட்டுசெய்பவன் உணர் தோழா

மானம் பண்பு பார்த்து நடப்பவன்
மரணத்தை தேடுருன் என் தோழா
ஈனத் தொழிலை ஏற்று செய்பவன்
எதிர்ப்பின்றி வாழ்கிருன் தோழா

பொய்யைச் சொல்பவன் புல்லர் துணையுடன்
போகத்தில் புரளுறான் என் தோழா
நய்ய உழைப்பவன் நாட்டைத் தொழுபவன்
நலிந்து மடிகிறான் உணர் தோழா

எத்தரும் உலுத்தரும் இந்த நாட்டினில்
இன்ப வாழ்வினை எளிதில் பெறுகிறார்
சத்தியம் தர்மம் வழியில் நடப்பவர்
சாவினை நாடுறார் என் தோழா

இந்த நிலையினை இன்னமும் விடலாமோ?
எழுந்து ஒன்றாய்ச் சேருவோம் வாராய்
சொந்த மதியினை கொண்டு அநீதியை
தொலைக்க ஒன்றாய் சேருவோம் வாராய்!



# மறுமலர்ச்சி

பெரியோர் பலரும் பிறந்த பின்பும்
பேசும் அவர் உரை கேட்ட பின்பும்
அரியோர் பலராய்ப் பெருகவில்லை
அந்தோ இதற்குக் காரணம் ஏன்?

பெரியோர் கூறிய அறிவுரையை
பேணி ஒழுக மறந்த ஒரு சிலரும்
சரியாய் நகலை பிறர் நடுவில்
சாற்றின் ஏதும் பயன் விளைந்திடுமோ

'அறம் தவருதே' என்று குழவிகட்கு
அனுதினம் நாமும் கூறிவிட்டு
மறம் தவருது தினம் ஒழுகும் நமை
மனக்கண் பார்த்து நடக்குமவைகள்

ஆயிரம் ஆயிரம் கூறினும் குழந்தைகள்
அத்தகு சொற்களை மனங்கொளுமோ?
ஆயிரம் ஒழுக்கம் சொல்வதை விடவும்
அணுவளவு அவ்வழி நடந்தால் போதும்

பொய்யுரையீரதே எனக் குழந்தைகட்கு
புகட்டின் ஏதும் பயன் உண்டோ
மெய்வழி நாமும் நடந்து விடில்
மேற்படி சொற்களும் தேவையோ சொல்?

சொல்லில் ஒழுக்கம் இருந்தால் போதும்
சொந்த வாழ்வில் அது வேண்டா - என
அல்லும் பகலும் பிறருக்குரைத்து
அதுவே பழக்கமாய் ஆனதினால்

வளரும் குழவியும் அவ் வழியை
மனத்தில் கொண்டு வளர்வதினால்
வளர்ந்து பெருகுது பொய் ஒழுக்கம்
வாழும் உலகே உணர்வாய் நீ

சொல்லும் செயலும் வேறு என்று
சொல்லித் திரியும் காலம் வரை
அல்லல் அல்லால் வேறு இல்லை
அகிலமே நன்கு உணர்வாய் நீ

மணிக் கணக்கில் சொல் வேண்டா
மணிநெல் அளவில் நடை போதும்
கணிப்பாய் மனதில் இக் கணக்கை
காண்பாய் விரைவில் மறுமலர்ச்சி.



# வோட்டுப் போடுங்கடி

1967 தேர்தலுக்கு முன் "தின மலர்" நாளிதழில் வெளியானது.

தேர்தல் நாளும் நெருங்குதடி
தெருவெலாம் ஒலி முழங்குதடி
நேர்மை பேசி வருவாங்கடி
நேரே மாறியும் நடப்பாங்கடி
காரினிலே சுற்றிக்கொண்டே
காலைப்பிடித்து வோட்டு வாங்கி
மார் நிமிர்ந்து நடப்பாங்கடி
மனதிலும் நம்மை நினையாரடி

அன்று வோட்டு பெற்றோர்கள்
அரிய செய்கை எது செய்தார்
சென்ற வழியே வந்தவரா
செயற்கரிது செய்தவரா
என்று நீயே பன்முறையும்
எண்ணிப் பார்த்து உன் வோட்டை
நன்று சீலம் உடையோர்க்கே
நாடு வாழ வழங்கிடுவாய்

நாட்டிற் கெதுவும் செய்யாமல்
நாளது வரையும் பதவிகளில்
நீட்டிப் படுத்துத் தூங்கினோரும்
நீட்டிடுவார் கை வோட்டிற்கு
ஓட்டிடுவாய் அப் பேர்வழியை
வோட்டு உனக்கு இல்லையென
காட்டிடுவாய் உன் திறமையினை
கடமை வீரரைத் தேர்ந்தெடுத்து

வீட்டு வாயில் வந்திடுவார்
வீதியில் கண்டும் தொழுதிடுவார்
வோட்டு கேட்டு கெஞ்சிடுவார்
ஒப்பாரி பலவும் பாடிடுவார்
வோட்டு கொடுக்கும் தோழி நீ
உணர்ந்து கொடுக்க வேண்டுமடி
நாட்டு மக்கள் நலம் தனிலே
நாட்டம் கொள்ள வேண்டுமடி

உரிமை உனக்கு இது ஒன்றே
உத்தமியே நன்குணர்வாய்,
கரியை அடக்கும் கோல்போன்று
கரத்தில் இருக்குது உன் வோட்டு
அரிய சக்தியும் அதுவேதான்
அந்தோ நீயும் அதை மறந்தால்
நரியும் கழுகும் பதவிகளில்
நாளும் இருந்தே துன்புறுத்தும்

நன்ருய் உனக்கே கூறிவிட்டேன்
நங்காய் நீயும் மறவாதே
என்றும் நாட்டின் முன்னேற்றம்
எதுவோ அதையே மனதினிலே
நன்றி உணர்வாய் தினம் எண்ணும்
நல்லோர் யாரென நீ தேர்ந்து
வெற்றி கொடுக்கும் உன் வோட்டை
விரைந்து சென்று போட்டுவிடு.



# வன்மைத் துணையுடன் வந்திடுவாய்!

வாராய் தோழா அருகேவா
வருத்தும் உந்தன் சோம்பலையும்
நேராய் முயற்சி நெருப்பினிலே
நீற விட்டு வாராய்நீ
பாராய் உலக வாழ்வினையும்
பகுத்தறிவின் சாதனையும்
சீராய் நீயும் வாழஇங்கு
சிறப்புமிகுந்த இடமும் காண்!

நினைப்பு நீள்வதில் பயனில்லை
நிலைக்கும் செயலில் பயனுண்டு
அனைத்தும் உந்தன் முயற்சியினில்
அருகே வந்துதான் நிற்கும்
மனத்தில் சற்றும் மடிவேண்டா
மண்ணும் விண்ணும் உனதடிமை
எனைத்துத் தடங்கல் ஏற்படினும்
எல்லாம் தூளாய் பறந்திடுமே!

உன்னை மாற்ற முயல்வோரை
உணர்ந்து நீயும் மாற்றிவிடு
அன்னை நாடு வாழ்வதற்கே
அங்கு மிங்கும் தடையாக
சின்ன மதியோர் இருக்கின்றார்
சிதைத்தே அவரை ஒழித்துவிடு
தன்னை நாட்டின் வாழ்விற்கே

வாரி வாரி வழங்கிடுவாய்
வற்ரு இன்பம் பெற்றிடுவாய்
பாரில் எதுவும் நிலைப்பதில்லை
பண்பும் அன்பும் நிலைத்திடுமே
பாரி, ஓரி நம்மவரே
பாரில் அவர் பெயர் நிலைத்ததுவே
தேரின் தெளிவாய் உணர்வாயே
தெளிவுடன் செயலில் கலப்பாயே!

தொழிலை மதிக்கா துரோகிகளை
துளைத்தும் திருத்தி எடுத்திடுவாய்
எழிலை வணங்கா நெஞ்சர்களை
இழகவைத்து மாற்றிடுவாய்
இழிவு செயலில் பணம் சேர்க்கும்
எத்தரும் ஒழிய முயன்றிடுவாய்
வழியை நல்வழி ஆக்கிடுவாய்
வன்மைத் துணையுடன் வந்திடுவாய்!



# சிந்தனையும் செயலும்

சிந்தனை எனும் பறவை
சிறகடிக்கத் தொடங்கிவிடில்
சொந்தமும் மறந்துவிடும்
சூழ் நிலையும் துறந்துவிடும்
பந்தமும் பாசமும் போம்
பரவசக் கடல் ஆழ்த்திவிடும்
சந்தமுள்ள காட்சி பல
சடுதியிலே முன் தோன்றும்

தோன்றிய நற் காட்சிகளை
தூய வெண் காகிதத்தில்
ஊன்றிய எழுது கோலும்
உண்மை பல காட்டிவிடும்
சான்றுகள் வந்து கூடும்
சன்மார்க்க நெறியும் காட்டும்
ஆன்றோர்கள் வகுத்த வழி
அதனுள்ளே ஒளியும் வீசும்

ஓவியன் நெஞ்சத் துள்ளே
ஒளி விரிந்து படர்ந்துவிடில்
ஓவியமாய் உருவெடுக்கும்
உணர்வுகளை கவர்ந்திழுக்கும்
காவியம் படைக்கும் நெஞ்சில்
கனிந்துவிடில் அந்த ஒழி
காவியமாய் உருவெடுத்தே
கருத்துள்ளே மணம் பரப்பும்

தாவிடும் குரங்கு நெஞ்சில்
தடமாகா அந்த ஒளி
பாவிகள் நெஞ்சி லவை
பட்டதுமே மறைந்து விடும்
மாவீரன் விழி கொண்டாலும்
மதிப்பின்றி மறைந்து விடும்
சாவி விதைத் துரமிடினும்
சந்தமிகு செநல் வருமோ?



# சதிகாரர் நெருங்கிடவும் முடிந்திடுமோ?

ஒன்ருகி இரண்டாகி மூன்றுமாகி
உயர்வான ஐந்தாண்டு திட்டமிட்டு
அண்ணலவர் காந்திஜியின் அறவழியில்
ஆக்கமுடன் முன்னேறும் வேளையினில்
பண்ணுது எதிரிபலர் சூழுகின்ருர்
எழிலான பாரதத்தில் ஆசைகொண்டு
மண்ணுசைப் பிடித்தலைந்த வீணரெலாம்
மானிலத்தில் நெடுங்காலம் வாழ்ந்ததில்லை!

வீரர்களும் தியாகிகளும் பிறந்த நாட்டை
வீணர்களும் பிடித்தடக்க முடிந்திடுமோ
தீரர்களும் மேதைகளும் வாழும் நாட்டை
தீயர்களும் வசமாக்க இயன்றிடுமோ
பாரதத்தின் ஒன்றுபடும் பண்பறியார்
பயந்தோடி அழியும் நாள் தேடுகின்ருர்
சூரபத்மன் மடிந்தாற்போல் மடிந்திடுவார்
சூழ்ச்சியால் நமைவெல்ல வருவோர்கள்

சக்திஎன்ற தனித்தன்மை நமக்குரிமை
சன்னமார்க்க நெறியதும் நமது பண்பு
பக்தியினை நாட்டிற்கே உரிமை செய்வோம்
பண்பு என்ற பெருஒளியும் நம்முடைமை
யுக்திதனில் உயர்ந்தோர்கள் நம்மில் பலர்
உலகிற்கே நெறிகாட்டும் மேதை பலர்
சக்தி பல ஒன்ருகி ஒளிரும் நம்மை
சதிகாரர் நெருங்கிடவும் முடிந்திடுமோ?

# எங்கும் பணம்

கையிலே காசுமில்லை
கடன் கொடுப்பார் யாருமில்லை
பையிலே பணமு மில்லை
பரிவு கொள்வார் யாருமில்லை

தையிலே வழி பிறக்கும்
தானாக வறுமை விடும்
பொய்யில்லை என்று சொன்னோர்
போன இடம் தெரியவில்லை

பாரிலே பண மிலாதான்
பாசம் வைக்கக் கூடாது
ஊரிலே இருக்க வேண்டா
ஊமையாய் அலைய வேண்டும்

பாசமும் நேசமெல்லாம்
பணத்துள்ளே இருக்குதடா
வாசம் விட்ட மலராக
வாடிடுவாய் பணமின்றேல்

பணத்திற்கே வணக்கமடா
பலவாறு புகழும் வரும்
குணத்திற்கே மதிப்பளிக்கும்
கொள்கையதும் இறக்குதடா

கல்விக்குப் புகழ் வழங்கும்
காலமும் கரைந்ததடா
பல்வேறு வழியினிலே
பணம் சேர்ப்போன் தலைவனடா

உருட்டு, புரட்டு கயமைக்கும்
ஒத்து ஊதும் காலமடா
குருட்டுக்கு குருடு வழி
கூறி வரும் காலமடா

மானம் தானம் என்பதுவும்
மாயமாய் பறந்ததடா
ஈன புத்தி எங்கணுமே
எக்காளம் போடுதடா

நீதி வழி நடப்போர்கள்
நிலை இழந்து மடிந்திடுவார்
வீதி வழி திரிவோர்கள்
வேதப்படி நடந்தவரே!

சுயநலத்தின் முழு உருவாய்
சூழ்ச்சிகளின் இருப்பிடமாய்
கயவர்களின் கொட்டகையாய்
காலமதும் மாறுதடா

பணமதனை சேர்த்திடடா
பல சூழ்ச்சி படித்திடடா
கணங்கூட தவறி விடில்
கலங்கி நீ இறந்திடுவாய்

அற வழி நீ நடந்தால்
அனுதினமும் பட்டினியே
இறைவனுக்கு அஞ்சிவிடில்
இகழ்ந்துரைக்க ஆளாவாய்!



# பேரறிஞர் ஆள வேண்டும்

காடுகளை நித்தம் உழுது
கழனியில் குருதி சிந்தி
மேடுகளை பள்ளமாக்கி
மேனியினை எருவாய் இட்டு
பாடுபடும் உழவர் ஏறே
பலன் என்ன உங்களுக்கு?
தேடுவீர் உமை உணர்ந்து
தெள்ளிய வாழ்வு தன்னை!

எத்தனை நீர் உழைத்தாலும்
எள்ளளவும் பெருமையுண்டோ
மெத்த உமை புகழுருங்க
மேடை தோறும் போற்றுருங்க
முத்து முத்தாய் ஏடுகளில்
மூச்சடக்கி எழுதுருங்க
அத்தனையும் உம் பசியை
அணுவளவும் தீர்த்திடுமோ?

வீண் புகழ்ச்சி வேண்டாமே
வெற்றியே உமக்கு வேண்டும்
காண்பதற்குக் கண்ணுளோர்கள்
கடமையினை உணர வேண்டும்
ஆண் என்னும் தன்மையாளர்
ஆட்சியினில் அமரவேண்டும்
பேணுகின்ற தாய்மை வேண்டும்
பேரறிஞர் ஆள வேண்டும்

# மாயும் மக்களும் இருந்தனரோ

(பொங்கற்பா)

சங்கம் வைத்து மொழி வளர்த்து
சான்றோர் பலரை நிதம் வளர்த்து
எங்கும் ஏற்றம் பெற்றிருந்த
என் தமிழ்த் தயே முன்னுளில்
பொங்கல் திருநாள் பொழுதினிலே
போற்ற வேண்டும் தொழிலாளர்
தங்க இடமும் உணவுமின்றி
தாழ்ந்து கிடந்தது உண்டோ சொல்?

பாதை வழியில் பல குடும்பம்
பசித்து வாடும் இழிவு நிலே
காதை அடைக்கும் வறுமைக் குரல்
கருத்தை உலுக்கும் அவலஒலி
தீதை எதிர்க்க இயல்பின்றி
தீயில் துடிக்கும் அபலேகளும்
மேதாய் நீயும் கேட்டதுண்டோ
மேன்மையுற்ற தமிழ்த் தாயே

பதவி மோகம் பிடித்தலேந்து
பாமரர் பலரைப் பழி வாங்கி
உதவி என்ற போர்வைக்குள்
ஊரை ஏய்த்து உருக்குலேத்து
நிதமும் சூழ்ச்சி பல புரிந்து
நீசர்கள் வாழ வழி வகுத்து
வித விதமாகத் தினம் நடிக்கும்
வீணர்கள் உண்டோ அந்நாளில்

உழைக்கும் வர்க்கம் உணவின்றி
உழலவைத்து மகிழ்வோரும்
பிழைக்க வழியாம் எனக்கூறி
பிற்போக்காளரைப் பணிவோரும்
அழைப்பு எதுவும் இலை எனினும்
அழையா இடத்து நுழைவோரும்
மழைக்கு ஏங்கும் பயிரைப்போல்
மறுகும் உழவனும் உண்டோ சொல்?



# பார்முழுதும் நமதே!

பாரதமே ஒன்று படு — உட்
பகைமையினால் பிரியாதே என் - பாரத

பதவி வெறி எழ வேண்டா
பணவேட்டை வர வேண்டா
உதவி செய்து உயர்ந்திடவே
உள்ளத்துள் உனை உணர்ந்திடுவாய் - பாரத

சிதறிவிடில் பலம் சிதறும்
சேர்ந்துவிடில் பகை அழியும்
பதறி விழும் நிலை ஒழித்தே
பார் வாழ ஒளி அருள்வாய் - பாரத

ஏர் இருக்கு வயலிருக்கு
எஃகு போல் உடல் இருக்கு
பார் புகழும் அறிவிருக்கு
பண்பட்ட மனமிருக்கு - பாரத

சுயநலத்தை ஒழித்து விடில்
சூழ்ச்சியாளர் நுழைவாரோ
பயமின்றி வாழ்ந்து விடில்
பார் முழுதும் நமதன்பர் - பாரத



# புதிய உறுதி கொள்வோம்

(பொங்கற்பா)

தங்கத்தின் ஒளி வீசி எழுந்ததுவே - இத்
தாரணி செழிக்க உதித்ததுவே
பொங்கலின் நாளும் புலர்ந்ததுவே - ஆதவன்
பூரித்த முகமாய் பொலிந்ததுவே

துன்ப இருட்கறை மறைந்ததுவே - மனதில்
தூய நல்லொளி நிறைந்ததுவே
பன்னிரு கையனின் அருளாலே, - இப்
பாரில் அறம்பல வளர்ந்திடுமே!

கன்னித் தமிழகம் செழித்துயர - நாம்
கட்சிப் பேதங்கள் களைந்திடுவோம்
அன்பில் ஒன்றுய்க் கூடிடுவோம் - நாம்
அத்தனை பேரும் நலம்பெறுவோம்

பழமையும் மனதிற் கொண்டிடுவோம் - நற்
பண்புகள் பலவும் வளர்த்திடுவோம்
உழவையும் தொழிலையும் கண்களென - என்றும்
உணர்ந்து ஒன்றி உழைத்திடுவோம்

புதிய உறுதி அகம் கொள்வோம் - பொருமை
பூசல்கள் ஒழித்திட உறுதிகொள்வோம்
மதியால் உலகை வெற்றி கண்டு - சன்
மார்க்க தனிவழி சென்றிடுவோம்.

# பொங்கல் வைப்போம்

(1966 பொங்கல் நாள் அன்று "தினமலர்" நாளிதழில் இடம்பெற்றது)

ஏர்பிடிக்கும் உழவர் வாழ பொங்கல் வைப்போம்
ஏற்றதாழ்வு தகர்ந்திடவே பொங்கல் வைப்போம்
கார்முகிலை வாழ்த்தி நாம் பொங்கல் வைப்போம்
கருணையுள்ளம் வாழ்ந்திடவே பொங்கல் வைப்போம்

கன்னித் தமிழ் வளர நாம் பொங்கல் வைப்போம்
கருமித்தனம் நீங்கிடவே பொங்கல் வைப்போம்
தன்னலத்தார் திருந்திட நாம் பொங்கல் வைப்போம்
தாயகத்தின் பகை ஒழிய பொங்கல் வைப்போம்

தொழில்புரிவோர் வாழ்கவென்று பொங்கல் வைப்போம்
தோழர்களாய் வாழ்ந்திடவே பொங்கல் வைப்போம்
பழிபாபம் ஒழிய நாம் பொங்கல் வைப்போம்
பாலர்களும் வீரராகப் பொங்கல் வைப்போம்

சாந்தி பண்பு வளர்கவென்று பொங்கல் வைப்போம்
சாதிப் பேய்கள் ஒழிந்திடவே பொங்கல் வைப்போம்
காந்தி வழி கடைபிடிக்க பொங்கல் வைப்போம்
கடமையினை உணர நாம் பொங்கல் வைப்போம்

கால்நடைகள் பெருகி வாழ பொங்கல் வைப்போம்
கருத்தினிலே ஒளி மிளிர பொங்கல் வைப்போம்
பால்போன்ற உள்ளம் பெற பொங்கல் வைப்போம்
பகுத்தறிவு வளர்ந்திடவே பொங்கல் வைப்போம்

போர் அரக்கன் பொசுங்கிட நாம் பொங்கல் வைப்போம்
பொழுதெல்லாம் மகிழ்ந்திடவே பொங்கல் வைப்போம்
ஓர் இனமாய் வாழ எண்ணி பொங்கல் வைப்போம்
ஒற்றுமையைக் காத்திடவே பொங்கல் வைப்போம்

பக்திமனம் நிதம் வளர பொங்கல் வைப்போம்
பழமையினை மறந்திடாது பொங்கல் வைப்போம்
சக்தி உணர்வு மிகையாக பொங்கல் வைப்போம்
சமாதானம் ஓங்கிடவே பொங்கல் வைப்போம்



# கன்னியே, கவனம்!

கட்டிக் கரும்பென்பார் கற்கண்டுப் பாகென்பார்
காதல் கனியென்பார் கண்ணின் மணி என்பார்
தொட்டால் மணமென்பார் துவண்டால் கொடியென்பார்
தோகை மயிலென்பார் தோற்றம் ரதியென்பார்
பட்டுப் புருவென்பார் பற்களை முத்தென்பார்
பரிவின் ஒளியென்பார் பச்சைக் கிளியென்பார்
கட்டுக் குலையா கன்னியே உன்தன் கரம் பிடித்தால்
காலத்தால் மறந்திடுவார் பலர்; காளையரை நம்பாதே!

வாழ்வின் துணையென்பார் வற்றாத இன்பமென்பார்
வானவில் நீயென்பார் வைரச் சுடர் என்பார்
ஆழ்கடல் முத்தென்பார் அமுத ஊற்றென்பார்
ஆயிரத்திலொருத்தி யென்பார் அழகின்உருவென்பார்
யாழின் ஒலியென்பார் எல்லாம் நீ யென்பார்
யாசகமும் கேட்டிடுவார் யார் உனக்கு நிகரென்பார்
பாழ்படுத்தி பகட்டை, குறைத்துவிட்டு, பாவையே
பார்வையினைத் திருப்பிடுவார் பலர் உளர் நம்பாதே!

கார்முகில் கூந்தலென்பார் காதலித்தேன் என்பார்
காணக் கண் கூசுதென்பார்
[கன்னியே அடிமையென்பார்
பார்முழுதும் உனதென்பார் பகலிடும் மின்னலென்பார்
பாய்ந்து வரும் அருவியென்பார்
[பசுமைச் சோலையென்பார்
சீர் சிறப்பும் நீ யென்பார் சிரித்தாலே போதுமென்பார்
சின்னஞ் சிறு சிட்டென்பார்
[சிங்காரக் கோயிலென்பார்
மார் அழகை வர்ணிப்பார் மனம் விட்டுப் புலம்பிடுவார்
மாதே இவை நம்பாதே மயக்கத்தில் வரும் மொழியே

தான் காப்பேன் என்றிடுவார் தரையிலும் உடன் வீழ்வார்
தாரகையும் நீ யென்பர்
[தலை தாழ்த்துக் குழைந்திடுவார்
வாள் தீட்டும் நுதலென்பார் வைகலின் ஒளியென்பார்
வண்ண மதியென்பார் வர்ணக் கலையென்பார்
நாள் முழுதும் உன்னுடனே நானிருப்பேன் என்றிடுவார்
நாடிய பொருளெலாம்
[நான் படைப்பேன் ஆணையென்பார்
தோள் வற்றி நிறம் வெளறி தோலில் சுருக்கம் கண்டால்
தொலை வழி ஓடிடுவார் துரோகி பலர் நம்பாதே.



# தடுமாற்றம் அடைவதுமேன்?

மாலை மணி நான்கிருக்கும்
　　மாஞ்சோலை நடுவிருந்தேன்
சாலை வழி என் பார்வை
　　சாய்ந்தோரிடம் நிலைத்ததுவே

இடும்பில் சிறு குடமிடுக்கி
　　எழில்மிகு நடைபோட்டு
தடுப்பாரே இல்லார் போல்
　　தாவி வந்தாள் ஓர் கன்னி

கன்னிமயில் வரக்கண்டு
　　கலைந்திருந்த தலை மயிரை
தன்னுலோடி வாரி விட
　　தயங்கவில்லை என் கரங்கள்

குனிந்திருந்த என் முதுகும்
　　குத்தெனவே நிமிர்ந்திருக்க
பனி விழுந்த சிறு மலராய்
　　பதறியதேன் என் இதயம்

பெண் என்ற பெருங்காந்தம்
　　பெரியதொரு அதிர்ச்சியினை
எண்ணுமல் என் அகத்தில்
　　எவ்வாறு புகுத்தியதே

ஆடை நிலை சரிசெய்து
　　ஆசைதனை எழச் செய்து
ஜாடையாய்ப் பார்த்திட நான்
　　சமயம் நோக்கி துடிதுடித்தேன்.

தூண்டப் பக்கம் என்கரமும்
தானகத் தடவி விட
கோடை சூட்டில் குளிர்பானம்
குடித்தவன் போல் நானனேன்

நீர்எடுக்க வந்த கன்னி
நிமிர்ந்து கூட பார்க்காது
கார் முகிலில் மின்னலென
கடந்து சென்ருள் எனைவிட்டு

மார் குனிய மனங்குமய
மயக்கம்வர தலை சுழல
ஆர்வமெலாம் பறந்தோட
அசைவின்றி நானிருந்தேன்

அம்புபோல் அவள் சென்ருள்
அம்புகொண்ட நிலை எனக்கு
தெம்பற்று செயலிழந்தும்
தெளிவாய்ப் பின் தனைஉணர்ந்தேன்

ஒன்று மங்கு நடக்கவில்லை
ஒரு பயனும் கிட்டவில்லை
நன்ருய் நான் உணர்ந்த உடன்
நாணம் மிகமிக அடைந்தேன்

அன்றுடம் எனைப்போல் பெண்
ஆசை மனம் கொண்டுநிதம்
கன்றுபோற் துள்ளி வரும்
காளையரே உணர்வீர் நன்கு

கன்னி உரு கண்டஉடன்
கற்பனை வான் மிதப்பதுமேன்
தன்ஞல் மனங்குழம்பி நீவீர்
தடுமாற்றம் அடைவதுமேன்?

# இக்கால அழகு

கரிய நீண்ட விழி என்பார்
காதல் காட்டும் கண்ணென்பார்
அருமை பேசி இதழ்களையும்
அழகியக் கோவைக் கனியென்பார்
கருமை நிறை நீள் கூந்தலையும்
கரிய விசும்பிற் குவமை சொல்வார்
பெருமை பேசி சடை பின்னலையும்
பெரும் பாம்பெனவே வர்ணிப்பார்

குத்திக் காட்டும் மார்பகத்தை
குமுத மொட்டென கூறிடுவார்
மத்தியில் தெரியும் அழகிடையை
மலையின் இடையென செப்பிடுவார்
முத்து வரிசைப் பற்களென்பார்
முகத்தைத் தாமரை மலரென்பார்
எத்தனை எத்தனை உவமையடா
எல்லாம் பெண்ணின் உடலுக்கே

அக்காலப் பெண்ணை இப்படியெலாம்
அழகுடன் புகழ்ந்தார் படிக்கின்றோம்
இக்காலப் பெண்ணை சிறிதளவு
எனக்குத் தெரியும் உண்மை இதோ
அக்கா தங்கை மங்கையர்க் குலமே
அந்தோ நீங்கள் என்மீது
மிக்க கோபம் கொள வேண்டா
மேதினி நடைமுறை கூறுகிறேன்

கண்கள் காட்டும் கறுப்பழகு
கடையில் விற்கும் மை யருளே
பெண்கள் உதடும் பறை சாற்றும்
பெருமை பெற்ற சாய நிறம்
உண்மை மார்பு அல்லவென
உள்ளிருக்கும் உறை கூறும்
வெண்மை என்றால் ஆனதென
§வெள்ளைப் பொடியும் கொக்கரிக்கும்

சடையின் நீளம் மிகத்தெரிதல்
சவுரி - திருப்பன் அருளன்றோ
நடையில் மிடுக்கு ஏற்றுவதும்
நைலான் உடையின் எடுப்பன்றோ
கடைகள் பலவும் சேர்ந்த உரு
கன்னிகள் பலரின் அழகுருவாம்
உடையும் பகட்டும் அன்றி பிற
உண்மை அழகு மிகக் குறைவே!



§ வெள்ளைப் பொடி - பவுடர்

# காதல்

அன்பினில் கனிவது காதல்
அகத்தில் நிறைவது காதல்
தன்னலம் மறப்பது காதல்
தன்னையே கொடுப்பது காதல்

காம உணர்வல்ல காதல்
கருத்தில் ஒன்றுவது காதல்
நாம ஜபமல்ல காதல்
நல்ல உணர்வே காதல்

பலன் கருதாதது காதல்
பண்பை வளர்ப்பது காதல்
குலம் கடந்தது காதல்
குறை காணாதது காதல்

கடலைப் போன்றது காதல்
காழ்ப்பில்லாதது காதல்
உடலை உதறி எறிந்து
உயிரோடொன்றுவது காதல்

எத்தனை துன்பம் ஏற்படினும்
ஏற்றுக் கொள்வதே காதல்
அத்தனைக்கும் பதில் இன்பமதை
அள்ளிக் கொடுப்பது காதல்



# பெண்மையின் தன்மை

அன்பின் அடித்தளம் பெண்மை - அகிலத்தை
ஆக்கி வளர்ப்பதுவும் பெண்மை
பண்பின் உறைவிடம் பெண்மை - பாரில்
பாசம் வளர்ப்பதுவும் பெண்மை

பொறுமையின் முழு உரு பெண்மை - உரிமைக்கு
பொங்கி எழுவதும் பெண்மை
சிறுமையை வெறுப்பதும் பெண்மை - மனதில்
சீலம் வளர்ப்பதும் பெண்மை

சக்தியின் வடிவது பெண்மை - அகத்தில்
சாந்தியை வளர்ப்பதும் பெண்மை
முக்திக்கும் உறுதுணை பெண்மை - வாழ்வின்
முதுகெலும்பாவதும் பெண்மை

அடிமை நாட்டின் விடுதலைக்கும் - பெண்மை
அஞ்சாது போராடி உயிர்கொடுக்கும்
படிமீது புகழ்வானில் ஒளிவீசி - என்றும்
பகரரிய தியாகிகளைத் தோற்றுவிக்கும்



# கலைஞனின் மயக்கம்

பின்னலவள் இரண்டு கொண்டாள்
பிறை நுதலும் தனக்கே கொண்டாள்
மின்னலென பார்வை கொண்டாள்
மீன்களென விழிகள் கொண்டாள்

விசும்பென கேசம் கொண்டாள்
வீரர்வாள் புருவம் கொண்டாள்
வசைவு இல் குழைகள் கொண்டாள்
வைர ஒளி அவற்றில் கொண்டாள்

தாமரை முகமே கொண்டாள்
தங்கையவள் சாயல் கொண்டாள்
காமனின் மகுடமென்னும்
கையடக்க கொங்கை கொண்டாள்

உடுக்கையின் உருவம் காட்டும்
ஒயிலான இடையே கொண்டாள்
மிடுக்கான நடையும் கொண்டாள்
மேன்மையான் நாணம் கொண்டாள்

அன்னத்தின் தூவி பட்டால்
அரற்றிடும் அடிகள் கொண்டாள்
மன்மதன் பாணம் தீட்டும்
வண்ணமிகு தோள்கள் கொண்டாள்

குங்குமத்தின் நடுவே தோன்றும்
குதிரை ஏழுடையான் போன்று
மங்கையவள் சிரிக்கும் போது
மலரெல்லாம் உடன் சிரிக்கும்

ஒடித்த தாமரைத் தண்டதனில்
ஓடும் நூலென அவளிடையும்
பிடித்து வைத்தாற்போல் மிளிரும்
பெண்ணவள் அழகை என் சொல்வேன்?

★ ★ ★

கண்டவுடன் என் விழிகள்
கணங்கூட இமைக்கவில்லை
அண்ட எண்ணி என் கால்கள்
அவளருகே சென்றனவே

நெருங்க எண்ணி நான் நடக்க
நெருங்கி வந்தாள் என் அருகே
கருங்குவளைக் கண்ணியவள்
கரம் நீட்டி எனை அழைத்தாள்

கன்னியவள் அழைத்த உடன்
கணத்தில் வெட்கம் மேலிட நான்
தன்னால் தலை திருப்பினதும்
'தந்தையே' என அழைத்தாள்

***அழைத்த அவள் குரல் கேட்டு:-***

திடுக்கிட்டேன் திகைப்பு மிக
திரும்பி அவள் முகம் பார்த்தேன்
'அடுக்குமா இளைஞன் 'எனைப்' பார்த்து
அப்பா வென்றழைப்பதற்கே?'

நான் கேட்ட கேள்வி கேட்டு
நங்கையவள் சிரித்தவாறு
"ஊன் உறக்கம் கெட நீவிர்
உண்மையில் எனைப் படைத்தீர்

படைத்ததையும் உடன் மறந்து
பாவை என்னை நேசித்து
தடை ஏதும் இல்லையென
தயங்காமல் வந்தீரோ?"

*என்று கேட்க:-*

நங்கையவள் கேள்விக் கணை
நாகம்போல் பாய்ந்து வர
பொங்கி வந்த ஆத்திரத்தில்
புத்தி கெட்டு எனை மறந்தேன்.

படாரென திடீர் ஒலி
பளிச் செனவே விளக்கிெளாளி
மடாரென தரை வீழ்ந்தேன்
மயக்கமது தெளிந் தெழுந்தேன்

கண்டதெலாம் வீணான
கனவதுவே என்றுணர்ந்தேன்
அண்டையினில் நான் வரைந்த
அழகுருவம் (ஏளனமாய்) சிரித்ததுவே"

என் கனவில் மோகினியாய்
எழிலாட்டம் போட்டதெலாம்
என் கரத்தால் நான் வரைந்த
எழிலுருவே என்றுணர்ந்தேன்.



தமிழரசுக்கழகத் தலைவர் சிலம்புச் செல்வர் **ம. பொ. சிவஞானம்** அவர்களின் மகன் செல்வன் **ம. சி. திருநாவுக்கரசு** அவர்களுக்கும், வெ. சே. சிவக்கொழுந்து அவர்கள் மகள் செல்வி **ஜெகதீஸ்வரிக்கும்** 24-5-1964 ஞாயிறன்று நடைபெற்ற திருமண விழாவின்போது வாசித்தளித்த

# மன்றல் வாழ்த்து

தண்டமிழ் செழித்துவாழ தன்னையே அர்ப்பணித்து
பண்டைய பண்புகாத்து பாரினில் அறம்வளர்த்து
மண்டலம் உள்ளமட்டும் மக்களின் அகத்தொளிரும்
தொண்டராம் சிவஞானத்தின் மைந்த, **திருநாவுக்கரசா**

பல்லறம் காத்துஎன்றும் பகலவனாய் நிதம் உழைத்து
இல்லறம் இனிதுகண்ட சிவக்கொழுந்து பெற்றெடுத்த
நெல்லினுள் பிறந்தமுதே நீரினுள் ஒளிரும்முத்தே
கல்வியில் ஒழுக்கம்கற்ற கவின்மிகு **ஜெகதீஸ்வரியே**

உங்களது மணநாள்கண்டு
உள்ளத்தில் மகிழ்ச்சி கொண்டு
செங்கதிர்ச் செல்வன் கண்டு
சிந்தையும் மிகக்குளிர்ந்து
பங்கயம் மலர்வது போல்
பருவத்தில் மலர்ந்திருக்கும்
மங்கல நாளின் நாளில்
மனமார வாழ்த்துகின்றேன்.

தங்கத்தில் வைரம் போன்று
தமிழினில் இனிமை போன்று
திங்களில் தண்மை போன்று
திருவொடு கண்ணன் போன்று
அங்கத்தில் உயிரைப் போன்று
அறிவினில் அடக்கம் போன்று
இங்கு நீவிர் ஒன்றே ஆனீர்
என்னாளும் மகிழ்ந்து வாழ்வீர்!

மலர்மணம் விரிந்தால் இன்பம்
மழையது பொழிந்தால் இன்பம்
குலவிடும் உள்ளம் இரண்டு
கூடிடும் மணநாள் இன்பம்
தலமிதில் தமிழ் வளர்த்து
தக்கபடி வாழ்வு அமைத்து
பல பல இன்பம் கண்டு
பல்லாண்டு வாழ்க! வாழ்க!!



1141-ம் கார்த்திகைத் திங்கள் 4 ம் நாள் (19-11-1965)
வெள்ளியன்று உயர்திரு தி. க. முத்துசாமி அவர்களின் செல்வன்
பொறிஇயல் வல்லுனர் சங்கரனுக்கும்
உயர்திரு எஸ். நடராஜபிள்ளை அவர்கள் செல்வி பாப்பாவுக்கும்
நடைபெற்ற திருமணத்தின்போது மனமகிழ்ந்தளித்த

# மன்றல் வாழ்த்து

தமிழ்நாட்டில் நிலைபெற்ற பண்பாட்டில்
தழைத்தோங்கி நாடகக் கலைவளர்க்கும்
அமிழ்தான சங்கரன் சகோதரரில்
அருங்கலைஞர் முத்துசாமி பெற்றசெல்வா
கமிழ்அறிவு பொறிஇயலில் பட்டம்பெற்ற
கடமைஉணர் செல்வ எம்சங்கரனே
இமிழ்கடல்சூழ் வையத்தில் சிறந்தநீயும்
இணைந்தமுத்து நல்முத்தாம் வாழ்வில்காண்பாய்.

நீள்பெருமை நிலைநாட்டும் குடும்பமதில்
நிலவெனவே ஒளிவீசும் நடராஜர்தன்
சூழ்பெருமை விளங்கவந்த நல்மணியாம்
சொத்தெல்லாம் பெண்மையதாய் பெற்றசெல்வி
வாழ்வினிலே வளமெலாம் பெற்றுவாழ
வரனாக சங்கரனை அடைந்தபாப்பா
ஆழ்அன்பின் உறைவிடத்தில் நீஇணைந்தாய்
அனுதினமும் இவ்வுண்மை உணர்ந்திடுவாய்

குடும்பமெனும் கோயிலுக்குள் செல்லும்நீவீர்
குணம்என்னும் குன்றேறி கடமையாற்றி
இடும்பைஎனும் சொல்லினையே அறியமாட்டீர்
இதயமே உணர்வுகட்குக் காரணமாம்
நடும்விதையைப் பொறுத்ததுவே செடியின் தோற்றம்
நன்றாக உணர்ந்திடுவீர் இந்தஉண்மை
உடும்பினைப்போல் குடும்பமதைப் பற்றினாலும்
உலகினையும் மறவாது தொண்டுசெய்வீர்

தாய்மொழியை உயிராகக் கொண்டுவாழ்வீர்
தரணியினில் பண்பதனை வளர்த்துவாழ்வீர்
சேய்களையும் தமிழ்ப்பண்பில் சான்றோராக்கி
ஜெகத்தினிலே ஒளிச்சுடராய் விளங்கவைப்பீர்
தாய்நாடு உரிமையெனில் பாரதத்தை
உறவாகக் கொண்டுபல கடமைசெய்வீர்
ஆய்கின்ற மனமதனை வளர்த்துநாளும்
அகிலத்தை நட்பாக ஏற்றுவாழ்வீர்!

நிதிதரும் பயிர்வளமும் நிறைந்துவாழ்க
நினைக்கின்ற நல்எண்ணம் சொல்லில்வாழ்க
மதிதரும் புகழ்வளமும் நிலைத்துவாழ்க
மாண்புமிகு மனைவளமும் பொலிந்துவாழ்க
சதிபதி உளவளமும் பெருகிவாழ்க
சன்மார்க்கர் ஆசிவளம் சார்ந்துவாழ்க
சுதிஇசை இணைந்துகலை உயர்ந்தாற்போல
சூழ்நிலைகள் நன்கிணைந்து உயர்ந்துவாழ்க!



---

**தி. க. முத்துசாமி அவர்கள் T. K. S. சகோதரர்களில் ஒருவர்**

# வேறு அழகும் ஏதுக்கடி?

செக்கச் சிவந்த தளிர் மேனி
சிரிக்க ஒளிரும் வெண்பற்கள்
சொக்க வைக்கும் சேல்விழிகள்
சோர்ந்து தவழும் கருங்கூந்தல்
சிக்கவைக்கும் செவ்விதழ்கள்
சிந்தைக் கிளறும் மார்பகங்கள்
ஒக்க அமைந்த இவ்வழகு
உண்மை அழகோ சொல்லடி நீ

பிடியில் நுடங்கும் இடையழகு
பின்னல் இழுக்கும் சடையழகு
நொடியில் கவரும் நடையழகு
நோக்கில் மயக்கும் மயில்சாயல்
கொடியில் காணும் உருவழகு
கோலக் குயிலின் குரலழகு
வடிவில் இவைகள் அமைந்தாலும்
வனிதையர்க் கிவையே அழகாமோ?

மங்கை ஒருத்தி வெளியழகு
மனதை மயக்கும் பொய்யழகு
கொங்கை காட்டும் கூர்அழகு
குணத்தின் அழகிற் கீடாமோ?
தங்க நிறத்தவள் ஆயிடினும்
தாய்மை இல்லையேல் யாது பயன்?
பொங்கு(ம்) அழகு பொலிந்தாலும்
பொறுமை இல்லையேல் பெண்ணாமோ?

அச்சம், நாணம், மடம் பயிர்ப்பு
அமைந்த அழகே மெய்யழகு
உச்சம் பெற்ற வறுமை வரினும்
ஒழுக்க நெறியே உயர் அழகு
குச்சில் குடிசை தரை எனினும்
கூடமாளிகை கோபுரமாயினும்
மச்சம் நீரை விரும்புதல் போல்
மனை அறம் காப்பதே மாஅழகு

உண்மை அழகு உள்அழகு
உயர்ந்த அழகு உயர் நெறியே
கண்மை காட்டும் அழகைவிட
கருணை காட்டும் விழிஅழகு
பெண்மை என்பது பொற்பேழை
பெருமை மிக்க பெருங்கடலாம்
வெண்மை அகத்தில் நிறைந்துவிடில்
வேறு அழகும் ஏதுக்கடி?



# பார்வை ஒன்றே போதுமடி

அஞ்சன வேல்விழி அரிவையயே - உன்
அழகு விழிகளைக் கண்டவுடன்
நெஞ்சம் நிலைகெட்டுத் தவிக்குதே - அதன்
நிறையினைப் பாடவும் துடிக்குதே

அம்பினை விழிகளாய் அமைத்தானோ - பிரம்மன்
அகிலத்தை அதனுள் வைத்தானோ
அம்பலன் எரித்திட்ட அழகரசன் - காணும்
ஆடவரைக் கொல்ல சமைத்தானோ

காதலால் உலகங்கள் வாழ்வதற்கே - கடைக்
கண்களில் ஒளியினைப் பெய்தானோ
வேதங்கள் தேடியும் விளங்கிடாத - பல
விந்தைகள் அதனுள் ஏன்படைத்தான்

கொக்கிபோல் சுண்டி இழுப்பதற்கே - எந்தக்
குறியினைக் கண்ணுள் வைத்துள்ளான்
சொக்கிப் பலரும் உனைச் சுற்ற - என்ன
சூழ்ச்சிகள் அதனுள் வைத்திட்டான்

மின்னலை வெண்ணிறம் ஆக்கினானோ - நடுவில்
மேகத்தைக் கருமை செய்தானோ
கன்னல் மொழியே கூறிவிடு - என்
கருத்தினை மேலும் கலக்காதே

வில்லினைப் புருவமாய்ச் செய்தானோ - கீழ்
வைண் சங்கதனையும் பதித்தானோ
அல்லல் படுத்தும் வெறியூட்ட - நடுவில்
ஆலத்தைப் புள்ளியாய் வைத்தானோ

கயலினைக் கருத்தில் பதியுவைத்து - உன்
கண்களின் ஓட்டம் செய்தானோ
ஓயிலாய் நொடியில் அலைபாயும் - தறி
ஓடத்தைக் கண்டு படைத்தானோ

பம்பரம் சுழன்றாற் போற் சுழன்று - பிரமன்
படைத்த அழகினை மிகைப்படுத்தி
உம்பரும் மயங்க உரைபுகலும் - உன்
யூகத்தை யாரே உணர்ந்திடுவார்?

அடிக்கடி இமைத்துத் திறப்பதினால் - பார்வை
அலைகள் பிறரை பக்குவமாய்
பிடித்து இழுக்கும் பெருவலியை - என்
பேதாய் நீயும் அறிவாயோ

மடியினை முட்டும் கன்றினைப்போல் - அளவு
மறிந்து குழையைத் தொடுவதுமேன்
வடி வழகொளியை வளமாக்க - பிரம்மன்
வரைந்து காட்டிக் கொடுத்தானோ?

தோயல் கடையும் கரம்போன்று - சற்றே
தோன்றித் தோன்றி மறைவதுமேன்
மாயம் பலவும் புரிந்துவிட்டு - மூடி
மறைந்து மனதை இழுப்பதுமேன்?

தொட்டாவாடி இலையினைப் போலும் - மயில்
தோகை மடக்கும் அழகினைப் போலும்
எட்டாப் பார்வைப் பட்டதுமுடனே - உன்
இமைகள் மூடி மறைப்பதுமேனோ?

வெட்கமென்ருெரு உணர்ச்சியினை - மூடிய
விழிகளில் பெய்து விளங்கவைத்து
முட்களால் உள்ளம் குத்துகின்ருய் - கண்ணே
மூடிய விழிகளைத் திறந்திடுவாய்!

மலரில் குவளையை உவமை சொல்வார் - மாதர்
மயக்கு விழிகளுக் கீடாமோ
உலரில் குவளையும் உரு அழியும் - உயிரை
உலுக்கும் சக்தி அதற்குண்டோ?

வானத்து ஒளிரும் ஒளிக்கதிர்கள் - என்றும்
வாரா ஒன்ருய் இம்மண்ணில்
மோனத்து முனியும் திகைத்திடுவார் - உன்
மோக விழிகளின் ஒளி கண்டு

நங்கையர்க்குணமாம் நான்கினையும் - உன்
நயனங்கள் நயமுடன் எடுத்துரைக்கும்
பங்கயம் நடுவே வண்டுகள்போல் - காலைப்
பகலவன் ஒளியினில் பளபளக்கும்

அழகின் முழுமையும் அதனுள்ளே - பிரம்மன்
அள்ளி உனக்கே கொடுத்திட்டான்
பழமும் பாலும் வேண்டாமடி -- உன்
பார்வை ஒன்றே போதுமடி



# முழுவுணர்வு

மாங்கனியின் சாறெடுத்து
மாதுளையின் ரசமெடுத்து
பூங்கதலிப் பழம் சேர்த்து
பூவினது தேன் சேர்த்து
அங்கதனுள் ஆவின் நெய்
அளவுடனே தான் சேர்த்து
பாங்குடனே சுவைத்தாற்போல்
பாவையவள் இதழ்சுவைத்தேன்

தென்றலெனும் உறையினுக்குள்
தெண்புகையை அடைத்தாற்போல்
அன்றலர்ந்த மலர்களெல்லாம்
அழகாகக் குவிந்தாற்போல்
நின்றலரும் அழகுடுத்த
நிகரற்ற அவள் உடலும்
குன்றமொத்த என் மார்பில்
குழைந்தொடுங்கிப் புதைந்ததுவே

இன்பத்தின் இரு சிகரம்
என் மார்பில் பதிந்துசெல
அன்னத்தின் சிறகு போன்ற
அவள் அங்கை என்முதுகில்
தன் அழகுக் கொங்கைகளை
தடவித் தடவிப் பார்த்தனவோ
என்னுடைய நினைவலையும்
எனைவிட்டுச் சென்றதுவே!



# இருகரங்கள் என அறிந்தேன்

காலையிலே ஏழுமணி
கதிரவனின் ஒளிவேண்டி
சோலையிலே சுற்றி வந்தேன்
சுகமான சூழ்நிலையில்
வாலையிலே இயற்கையவள்
வண்ண வண்ணக் கோலங்களை
ஓலையிலே தீட்டவில்லை
உள்ளமதில் தீட்டிவிட்டாள்

கன்னி எனும் இயற்கையவள்
களிநடத்தைக் கண்டு நானும்
பின்னி உடல் பிணைந்திட்டேன்
பிறிதுணர்வும் வந்திடுமோ
பொன்னி என்தன் காதலியும்
பொறுமையுடன் பின்(னே) வந்து
உன்னி உன்னிப் பார்த்திருப்பாள்
ஊகமே, நான் காணவில்லை

கட்டான இரு மலர்கள்
கண்களையும் அடைத்த உடன்
சட்டென்று தனை உணர்ந்தேன்
சந்தனத்தின் மணம் நுகர்ந்தேன்
பட்டொன்று முகம் மீது
படர்வதுபோல் இருந்திடவே
எட்டியே பிடித்து நானும்
இருகரங்கள் என அறிந்தேன்



# காதலனும் காதலியும்

**காதலன்:-** நீரினில் தோன்றும் நிழலே
நெய்யினில் வீசும் மணமே
நேரினில் தோன்றும் நிலவே
நெருப்பில் மிளிரும் புனிதமே -**நீரினில்**

**காதலி:-** பாரினில் தோன்றும் ஞாயிறே
பக்கத்தில் தோன்றும் பகலவா
ஊரினில் ஒருவனே ஒளியே
உள்ளத்தின் தெய்வமே வாராய் -**பாரினில்**

**காதலன்:-** வாழவேண்டுமென்ற ஆசையினை - எனக்கு
வழங்கிய மயிலே எனதுயிரே
வாழை மரத்தைத் தொடவேண்டா-உன்
வண்ணத் தோள் தொடில் போதுமடி -**நீரி**

**காதலி:-** அடைக்கலம் கொடுத்த ஆணழகா - என்
அகக்குறை அகற்றிய அன்புருவே
படைபலம் எதற்கு வேண்டாமே - உன்
பரந்த மார்பே போதுமைய்யா -பாரி

**காதலன்:-** நீரொடு நீரும் கலந்தாற்போல் - நம்
நினைவுகள் இரண்டும் கலந்ததினால்
வேரொடு வீழும் மரத்தினைப்போல் - உன்
வெண்ணிலாஉடலில் வீழ்ந்திடுவேன் -நீரி

**காதலி:-** பஞ்சுப் பொதிக்குள் விழும்பயிருய் - உன்
பரந்த மார்பில் நான் வீழ்வேன்
நெஞ்சும் நெஞ்சும் கலந்தபின்பு - பேல்
நீ வேறு நான் வேருயிடுமோ -பாரி

**காதலன்:** இனிக்கப் பேசும் எழில்மயிலே - என்
இதய விளக்கே இணைவோம் நாம்
தனித்து இருக்கவேண்டாம் வா - உன்
தவள மடியை தலைக்கே தருவாய் -நீரி

**இருவரும்:** இன்பம் இன்பம் பேரின்பம் - நம்
இதய இன்பம் யார்பெறுவர்
அன்பும் அறமும் இணைந்தாற்போல் - நம்
அகமும் புறமும் இணைந்ததுபார் -பாரி



# கண்ணே, கண்வளராய்?

*பல்லவி*

ஆராரோ ஆராரோ ஆரிரரோ - என்
ஆருயிரே ... கண்வளராய் **-என்**

*அனுபல்லவி*

குழலே யாளே குமுத மலரே
குங்குமச் சுடரே கோமகனே **-என்**

*சரணங்கள்*

தமிழகம் பிறந்த தண்மலரே
தன்மானம் காக்கும் தமிழ்மகனே
கலைகளில் உயர்ந்த காவியமே
கருவினில் வளர்ந்த ஓவியமே

இந்த நாட்டில் பிறந்ததினுல்
ஈடில் தவத்தைச் செய்தவனே
கடலிலும் கிடையா நல்முத்தே
கவலைகள் நீக்கும் கதிரவனே -என்

திருப்பூர் குமரனுய்த் திகழ்ந்திடுவாய்
தீரன் என்றே பெயரெடுப்பாய்
வ. உ. சி. யாய் வளர்ந்திடுவாய்
வற்ருப் புகழைப் பெற்றிடுவாய்

வள்ளுவன் குறள்வழி வாழ்ந்திடுவாய்
வழங்குவதில் பாரியாய் விளங்கிடுவாய்
பாரதி வழியினில் சென்றிடுவாய்
பண்பின் சுடராய் மிளிர்ந்திடுவாய் **-என்**

அடிமை என்ற சொல்லினையே
அடியோடொழித்து முன்னேறு
மடமை பேசும் மக்களையும்
மதியால் அணுகி திருத்திடுவாய்

தமிழே உனது உயிராகும்
தங்கமே பன்மொழி பயின்றாலும்
வண்டமிழ் நாடு வாழ்வதற்கே
வாழீ மகனே பல்லாண்டு

-என்



# நலமே நீ வருக வருக!

ஓம் என்னும் ஒலியே வருக
உணர்வென்னும் நெறியே வருக
நாம் என்னும் பண்பே வருக
நலம் என்னும் சிறப்பே வருக

அறம் என்னும் அன்பே வருக
அகிலம் நீ ஒன்ருய் வருக
திறம் என்னும் அருளே வருக
தியாகமென்னும் நெறியே வருக

சக்தி என்னும் தாயே வருக
சன்மார்க்க நிழலே வருக
முக்தியெலாம் இங்கே வருக
முதுமையெலாம் அறிவில் வருக

பக்தி என்னும் பகலே வருக
பாசமென்னும் உயிரே வருக
யுக்தி என்னும் எழிலே வருக
உதவி என்னும் தொழிலே வருக!



# முடிவுரை

உள்ளத்தில் எழுந்த கருத்துக்களை
ஓவியமாகவே தீட்டிவிட்டேன் - அறிவு
வெள்ளத்தின் ஆழம் நானறியேன்
வையக சான்றோரே அளந்திடுவார்

இதயமலரென்று பெயர் பொறித்தேன்
இன்தமிழ் மொழியைக் காதலித்து - என்
இதயம் கண்டதை நான் வடித்தேன்
ஏற்றிடும் உலகென நான்படைத்தேன்

எல்லா மக்களும் அன்னைக்கு ஒன்றே
எழிலும் குறைவும் அவருக்கு நிறைவே -மழலை
சொல்லாலவளும் மகிழ்வாளென்றே
சொல்லிமுடித்தேன் (தமிழ்)த்தாயிடம் தானே!

முற்றிற்று

பிறஸ் டாஸ் ஸன், டாஸ் பேப்பர்ஸ் பில்டிங்ஸ், நாகர்கோவில்.